PARLE

POPPINS

Goli Rainbow Wali - Doon Kya?

# Ram and Shyam

## வெள்ளிப் புகையின் மர்மம்




























Visit : www.chandamama.com/parle




THODA KHELO THODA KHAO
















mudra 0809



Orange Flavour | Watermelon Flavour | Mango Flavour | Grape Flavour

WHAT SHOULD YOU DO BEFORE YOU CHEW A

**BOOMER JELLY?**

- Play with the jelly
- Learn your 5 times table
- Finish your homework
- Get a hair cut




exciting prizes like Boomer CDs, sippers and lots of other goodies.

Name.......................................

Address:.......................................

.......................................

Contact no:.......................................

E-mail id:.......................................

*Terms and conditions apply

# பொருளடக்கம்



அம்புலிமாமா

மதிமுகம் : 62 செப்டம்பர் : 2009 புன்னகை : 9

# எல்லாரும் கொண்டாடுவோம்

**மா**றுதல்கள் பல நிகழ்ந்து கொண்டேயிருக்கும் இந்தப் புதிய யுகத்தில் மாறுதல் ஒன்றுதான் நிரந்தரமானது என்றே நம்பலாம். இது *அம்புலிமாமா*வின் விஷயத்திலும் உண்மையாக இருப்பதை நீங்களே கவனித்திருப்பீர்கள். *அம்புலிமாமா* இதழில் மட்டுமின்றி, அதன் நிர்வாகத்திலும் நிகழும் சில மாறுதல்கள் காலத்தின் கட்டாயமாகக் கருதலாம்.

இந்த மாதம் பல பண்டிகைகள் நிறைந்த மாதம்! ஆகவே, கொண்டாட்டங்களுக்கும், கேளிக்கைகளுக்கும் குறைவில்லை. முன்னாள் குடியரசுத்தலைவர் டாக்டர். எஸ். இராதா கிருஷ்ணனின் பிறந்த நாளான செப்டம்பர் 5ஆம் தேதியை ஆசிரியர்களின் தினமாகக் கொண்டாடுகிறோம். அன்றைய தினம், நமது அறிவுக் கண்களைத் திறந்த ஆசிரியர்களை சிரந்தாழ்த்தி வணங்குகிறோம்.

அதன்பிறகு, நவராத்திரிப் பண்டிகை வருகிறது. குஜராத், மகாராஷ்டிரா, கர்நாடகா, தமிழ்நாடு, மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. நவராத்திரியின் ஒன்பது இரவுகளும் பெண் தெய்வங்களுக்கு சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. நவராத்திரி உற்சவம் பத்தாவது நாளான விஜயதசமியன்று நிறைவுறுகிறது. அன்றுதான் துர்காதேவி மகிஷாசுரனை வெற்றி கொண்ட திருநாள்! அந்த தினத்தில்தான் இராமபிரானும், இராவணனைப் போரில் வெற்றி கொண்டார். இத்தகைய புராண நிகழ்ச்சிகள் சத்தியமே ஜெயிக்கும் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

முஸ்லிம்களும் இந்த மாதம் ரம்ஜான் பண்டிகையை சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். முப்பது நாள் பகற்பொழுதில் உண்ணாமல் இரவு மட்டுமே உண்டு விரதமிருக்கும் அவர்கள், அது நிறைவு பெற்றபின் விருந்துண்டுக் களிக்கின்றனர். இந்த மாதத்தில்தான் திருக்குரானும் தோன்றியது.

காலப்போக்கில் நமது கொண்டாட்ட முறைகள் சற்றே மாறியிருக்கலாம். ஆனால், பண்டிகைகளின் மீதுள்ள ஆர்வமும், பற்றுதலும் மாறவில்லை. அதுபோல், *அம்புலிமாமா* இதழில் சில புதிய மாற்றங்கள் தென்பட்டாலும், பண்பாட்டின் பிரதிபலிப்புகள் சற்றும் மாறப் போவதில்லை. நாங்கள் தற்போது அறிமுகப்படுத்தும் புதிய பகுதிகளைப் பற்றிய தங்களுடைய மனந்திறந்த கருத்துகளை ஆவலுடன் எதிர்ப்பார்க்கிறோம்.

ஆசிரியர் : **பிரஷாந்த் முலேகர்**


செப்டம்பர் 2009 Rs.20/-
***Founded by* B. Nagi Reddi and Chakrapani**

***Chairman :*** B. Viswanatha Reddi (Viswam)
***Editor & Publisher :*** Prashant Mulekar
***Associate Editor :*** Sowmya Rajendran
***Senior Artists:*** K.C. Sivasankaran (Sankar), Gandhi Ayya, P. Mahesh
***Artist :*** T. Venkatesan
***Asst. Editor-Copy & Pre-Production :*** R. Sudha
***Creative Writer :*** R. Vaasugi
***Layout Designers :*** M. Nagaraj, B. Thirumal

***CIRCULATION TEAM :***
***Mumbai :*** **Rajendra K Jadhav,** ***Asst. Manager-Circulation,*** Mobile +91 9320565048
**CHANDAMAMA INDIA LTD.,**
B-3, Lunic Industry, Opp. State Bank of India, Near Police Station Cross Road, No.6, MIDC Andheri (East), Mumbai-400093
Phone +91 22 28312872 / 28311849
email : rajendra.jadhav@chandamama.com
***New Delhi :*** **Sushil Sharma,** ***Circulation Manager-North,*** Mobile +91 99110 91022
**CHANDAMAMA INDIA LTD.,**
Goyal Business Centre, C-23/2 First floor, Connaught Place, New Delhi-110001
***Bangalore :*** **P. Murali,** ***Asst. Circulation Manager -Karnataka ,*** Mobile +91 94488 36952
**CHANDAMAMA INDIA LTD.,** 18, 10th Cross, Mayura Street, Papanna Lay Out, Outer Ring Road, RMV 2nd Stage, Bangalore-560094,
Phone +91 80 6655 1000
email:murali.p@chandamama.com
***Kolkata :*** **Ananth Prakash,** ***Circulation Manager-East,*** Mobile +91 98362 82202, 98351 82202
email : ananth.prakash@chandamama.com
***Ahmedabad :*** **Kalpesh Raval,** ***Sales Officer-Circulation*** Mobile +91 98245 19946
email : kalpesh.raval@chandamama.com
***Content Head - Online :*** **Sowmya Bharadwaj**
email : online@chandamama.com
***For Marketing Enquiries :***
email : marketing@chandamama.com
***Advertisement :***
email : sales@chandamama.com
***Subscription Queries:*** L Govindasamy
e-mail : govindaswamy.l@chandamama.com
***Customer Cell :*** A B Sairam
Mobile: +91 9841983774
e-mail : sairam.ab@chandamama.com
***Production Executive :*** Panchakshari R Math
***Head Office :*** **CHANDAMAMA INDIA LTD.,**
2/513 (Old 3/396), Sundeep Avenue East, 2nd Main Road, Chinna Neelankarai, Chennai - 600 041 Phone +91 44 43992828, Fax +91 44 43992829
Email : chandamama@chandamama.com
Website : www.chandamama.com

Printed and Published by Prashant Mulekar at Shruti Art Pvt. Ltd., Unit No.1, Gupta Mills Estate, Devidayal Industrial Compound, Darukhana, Reay Road (East), Mumbai - 400 010 on behalf of Chandamama India Limited, 2/513, Sundeep Avenue East, 2nd Main Road, Thiruvanmiyur, Chennai - 600 041. Editor : Prashant Mulekar




# வாசகர்கள் பக்கம்





## பரிசு பெறும் கடிதம்

**நா**ன் பல ஆண்டுகளாக *அம்புலிமாமா* படித்து வருகிறேன். இதில் வரும் அனைத்துக் கதைகளும் கற்பனை உலகிற்கு என்னை அழைத்துச் செல்கிறது என்று சொன்னால் மிகையாகாது. அதுவும் ''மண்டுக்கோட்டை'', ''இராமாயணம்'' பற்றிச் சொல்ல வேண்டும் என்றால் இந்தப் பக்கம் பத்தாது. இப்போது புதுப் பொலிவுடன் வெளிவருகிற *அம்புலிமாமா*வும் பழைய *அம்புலிமாமா*வைப் போலவே உள்ளது. சிற்சில மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தாலும் அது வரவேற்கத்தக்கதுதான். என்னைப் போன்ற பல வாசகர்களை மேலும் மகிழ்விக்க என் அருமை *அம்புலிமாமா*விற்கு வாழ்த்துகள்.



***– வ. சுப்புலட்சுமி, இராயகிரி***

**மூ**ன்று தலைமுறைகளாக நாங்கள் *அம்புலிமாமா*வைப் படித்து வருகிறோம். இதற்குக் காரணம் அதில் வெளிவரும் கதைகளும் அதற்கேற்ற ஓவியங்களும்தான். ஆனால், சமீபத்தில் இதில் கதைகளின் எண்ணிக்கையும், ஓவியங்களும் குறைந்து விட்டது என்றே சொல்லலாம். ஆனால், இதில் நீங்கள் வெளியிடும் ''பயமற்ற நால்வர்'' மிகவும் அருமை. என் மகன் அதை விரும்பி படிக்கிறான். *அம்புலிமாமா* குழந்தைகளை மட்டும் கவராமல் முன்பு போல் எங்களையும் கவர்ந்தால் மிகவும் நன்றாக இருக்கும்.



***– எஸ்.டி. தருமராஜ், சின்னமலை***



**தங்கள் கருத்துகளை**
feedback@chandamama.com **என்ற முகவரிக்கு மின்னஞ்சல் செய்யலாம் மற்றும்** MLANG <Space> <Name, Age> <Space> <TAM your feedback > **என்று டைப் செய்து** 54646 **என்ற எண்ணுக்கு** SMS **அனுப்பலாம்.**

# பள்ளி பாடமல்லாது...

நமது முன்னாள் குடியரசுத் தலைவரான டாக்டர். ராதாகிருஷ்ணன் அவர்களது பிறந்த தினமான செப்டம்பர் 5 ஆம் தேதியை ஆசிரியர் தினமாக ஒவ்வொரு ஆண்டும் நாம் கொண்டாடுகிறோம். பள்ளிக்குச் சென்றால் பாடம் கற்பதும், ஆசிரியர்கள் கொடுக்கும் வீட்டு வேலைகளை எடுத்து வந்து வீட்டில் செய்வது மட்டுமல்லாமல், நம் வாழ்க்கைக்கு முக்கியமான பாடங்களையும் நம்முடைய மனத்தில் ஏந்திக் கொண்டு வருகிறோம்.

லூயில் பிரெயில் என்பவரைப் பற்றித் தெரியுமா? மூன்றாவது வயதில் கண்பார்வையிழந்த இவர், தனது 17வது வயதில் ஆசிரியர் ஆனார். ஒருமுறை அவருக்கு க்ஷயரோகம் உண்டாக, மருத்துவ விடுமுறையில் வீட்டில் ஓய்வு எடுத்தார். அவருக்குப் புத்தகங்கள் படிக்க மிகவும் ஆசை! ஆனால், பார்வையற்ற அவரால் எதுவும் படிக்க முடியவில்லை. தான் பட்ட கஷ்டம் தன் பார்வையற்ற மாணவர்களுக்கு ஏற்படக்கூடாது என்ற நோக்கத்துடன், அவர் இரவுபகலாக பாடுபட்டு உழைத்து பிரெயில் எழுத்துகளை உருவாக்கினார்.

தான் சம்பாதித்த பணத்தையெல்லாம் பிரெயில் முறையில் பல புத்தகங்களை தோற்றுவித்தார். தன்னை உதவி நாடிவரும் ஏழை, எளிய மாணவர்களுக்கு தாராளமாக கடனுதவி அளித்தார். அவருடைய சாவுக்குப் பிறகு, அவர் நண்பர்கள் அவரிடமிருந்த ஒரு சிறிய பெட்டியில் ''இதைத் திறக்காமல் எரித்துவிடவும்'' என்று எழுதி இருப்பதைப் பார்த்தார்கள். அப்படியும் ஆர்வ மிகுதியினால் பெட்டியைத் திறக்க, அதனுள் அவர் கடன் கொடுத்த மாணவர்களின் பட்டியல் கடன் தொகையுடன் இருந்தது.



பிரெயில் எழுத்துகளைத் தோற்றுவித்து பார்வையற்றவர்களையும் படிக்கச் செய்தது அவர் சமுதாயத்திற்கு புரிந்த மிகப்பெரிய தொண்டு! ஆனால், அதனினும் உயர்ந்தது அவர் ஆற்றிய ஆசிரியப்பணி! ஒரு மாணவனல்ல, பல மாணவர்களல்ல, பல தலைமுறை மாணவர்களுக்குப் பயன்படும்படி அரிய ஆசிரியப் பணி செய்த அவரை நினைவில் கொண்டு, நமக்கு கற்றுக் கொடுத்த ஆசிரியர்களையும் அன்றைய தினம் மனமார வாழ்த்துவோம்.

## வேதாளக் கதை

# கபாலினியின் தீர்ப்பு

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் முருங்கை மரத்திலேறி, அதில் தொங்கிய உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர், அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லும் போது, அதனுள்ளிருந்த வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! எந்த ஒரு மகத்தான இலட்சியத்தை அடைவதற்காக நீ இத்தனை கஷ்டப்படுகிறாய் என்று நான் தெரிந்து கொள்ளலாமா? உன்னைப்போன்ற இலட்சியவாதிகள் பலர் இலட்சியம் கைகூடும் நேரத்தில் அதைக் கைநழுவ விடுகின்றனர். அப்படிப்பட்ட ஒருவனான ஆதித்தனின் கதையைக் கூறுகிறேன், கேள்'' என்று கதை சொல்ல ஆரம்பித்தது.

சிங்கபுரத்தை அடுத்திருந்த கௌசிகாரண்யம் என்னும் காட்டில் கோடங்கு என்ற பழங்குடியினத்தினர் வசித்து வந்தனர். அவர்கள் பல விநோதமான சடங்குகளைக்



கேள்விப்பட்டிருந்தான். சீர்த்திருத்தக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்ட அவன், காட்டில் அவர்கள் வசிக்கும் இடத்திற்கே சென்று அவர்கள் உடைய மூடநம்பிக்கைகளை அகற்றி அவர்களை நாகரீகம் உள்ள மனிதர்களாக மாற்ற விரும்பினான்.

ஒரு நாள் ரகசியமாகக் காட்டுக்குள் அவர்களைப் போலவே உடை அணிந்து சென்று அவர்களுடைய இருப்பிடத்தை அடைந்தபோது கபாலினி தேவி கோயிலில் பஞ்சாயத்து நடந்து கொண்டிருந்தது. கூட்டத்தில் இருந்தவர்களிடமிருந்து அவன் வழக்கைப் பற்றி அறிந்தான்.

சுபாங்கி என்ற ஆதிவாசி இளமங்கையின் மரணத்தைப் பற்றி அப்போது விசாரணை நடந்து கொண்டு இருந்தது. சுபாங்கியும், அவள் மீது பிரியம் கொண்ட பகுலன் என்ற இளைஞனும் காட்டுக்குள் வேட்டை ஆடச் சென்றிருந்தபோது, ஒரு புலி சுபாங்கியின் மீது பாய்ந்து கொன்று விட்டது. கோடங்கு இனத்தின் சட்டத்தின்படி, ஓர் இளமங்கை ஆபத்திலிருக்கும்போது, அவள் அருகிலிருந்து கொண்டே அவளை காப்பாற்ற தவறுபவன் பெருங் குற்றவாளியாகக் கருதப்பட்டுக் தண்டிக்கப்படுவான். அதன்படி, சுபாங்கியின் அருகிலிருந்தும் அவளைக் காப்பாற்ற இயலாத பகுலன் மீது குற்றம் சாட்டப்பட்டிருந்தது.

பகுலன் தன் தரப்பு நியாயத்தைக் கூறினான். ''தலைவரே! நானும், சுபாங்கியும் மதிய வேளையில் ஒரு

கையாண்டு வந்தனர். அவர்களின் குல தெய்வம் கபாலினியிடம் அவர்கள் ஆழ்ந்த பக்தியும், குலதெய்வத்தின் பூசாரியான கருடவீஷணனிடம் மிகுந்த மரியாதையும், நம்பிக்கையும் கொண்டிருந்தனர். எந்தப் பிரச்சினை ஆக இருந்தாலும், அதை அவர்களின் குலதெய்வமான கபாலினியின் முன் வைத்து, அவள் அளிக்கும் தீர்ப்பை அறிவித்து, அதை நிறைவேற்றவும் செய்து வந்தான். குலதெய்வத்தின் தீர்ப்பில் அவர்கள் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டு இருந்தனர். அதற்குக் கீழ்படிந்து நடப்பதையே தங்கள் கடமையாக நினைத்தனர்.

கௌசிகாரண்யத்திற்கு அருகில் இருந்த நகரான சிங்கபுரத்தில் வசித்து வந்த ஆதித்தன் என்ற இளைஞன் கோடங்கு இனத்தவரைப் பற்றி

மரத்தடியில் அமர்ந்து உணவருந்திக் கொண்டிருக்கையில், அந்தப் பக்கம் ஒரு மான் ஓடிவர, சுபாங்கி அதை அந்த நிமிடமே வேட்டையாட வேண்டும் எனப் பிடிவாதம் பிடித்தாள். நான் சாப்பிட்டு முடித்தபின் போகலாம் என்று தடுத்தேன். அவள் கேட்காமல் தான் மட்டும் தனியாக வேட்டை ஆடச் சென்றாள். நான் போவதற்குள் புதரில் பதுங்கியிருந்த புலி ஒன்று சுபாங்கியின் மீது பாய்ந்து அவளைக் கொன்று விட்டது. அவள் என் அருகில் இருந்தபோது புலி வந்திருந்தால் என் உயிரைக் கொடுத்தாவது அவளைக் காப்பாற்றியிருப்பேன்'' என்றான்.

உடனே நீலகண்டன் என்ற ஆதிவாசி, ''இல்லை! பகுலன் கூறுவது பொய்! சுபாங்கி மீது பகுலன் ஒரு காலத்தில் மிகவும் பிரியம் வைத்து இருந்தான். அவளையே மணம் செய்வதாக வாக்களித்திருந்தான். ஆனால், ஒரு விஷப் பூச்சி கடித்து, அவள் முகம் கறுப்பானதால், அவளை தன் பாதையிலிருந்து விலக்க முயன்றான். அன்று காட்டில் அவன் வேண்டுமென்றே புலி அவளைக் கொல்ல அனுமதித்தான்'' என்றான். பகுலன் அதை திட்ட வட்டமாக மறுத்தான். ஆனால், சுபாங்கியின் பெற்றோரும், உறவினரும் பகுலன் மீதுதான் குற்றம் சுமத்தினர். இரு தரப்பினரின் வாதத்திற்கும் நேரில் பார்த்த சாட்சியங்கள் இல்லாததால் பஞ்சாயத்து வழக்கப்படி, வழக்கை கபாலினி தேவியிடம் ஒப்படைத்தனர்.



பூசாரி சற்று நேரம் தியானத்தில் இருந்தபின் ஆவேசம் வந்து ஆடிய பின்னர் அருள் வாக்குக் கூறினான். ''அம்மா சொல்கிறாள்! வரும் அமாவாசை இரவில் பகுலனை கோயிலுக்குள் விட்டு கதவை சாத்தி விட வேண்டும். அவன் உண்மையான குற்றவாளியானால் அம்மாவே அவனுக்குத் தக்க தண்டனை அளிப்பாள்'' என்று உரக்கக் கத்தினான். கபாலினியின் தீர்ப்பைக் கேட்ட மக்கள் திருப்தியுடன் கலைந்தனர்.

அமாவாசை இரவு பூசாரி பகுலனை கோயிலுக்குள் தள்ளிவிட்டு, கூட வந்தவர்களை திருப்பி அனுப்பி விட்டு, கோயில் கதவுகளை மூடி விட்டான். மறுநாள் காலை ஆதிவாசிகள் கோயிலுக்குச் செல்ல, பூசாரி அவர்கள் முன்னால் கோயிலைத்



திறந்தான். உள்ளிருந்து அலறித் துடித்துக்கொண்டே பகுலன் வெளியே வந்தான். அவன் இரு கண்களில் இருந்தும் இரத்தம் வடிந்து கொண்டு இருந்தது. ''ஐயோ! கபாலினி என் கண்களைப் பறித்து விட்டாள்!'' என்று புழுவாய் துடித்தான். அவனைக் கட்டிக் கொண்டு பெற்றோரும், உற்றோரும் கதறியழ, மற்றவர்கள் அவன் செய்த குற்றத்திற்கு கபாலினி நல்ல தீர்ப்பு வழங்கி தண்டித்து விட்டாள் என்று கலைந்தனர்.

அதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த ஆதித்தன் மட்டும் கபாலினி தேவி பகுலனை தண்டித்தாள் என்பதை நம்பவில்லை. பகுலனின் குருடாக்கியது யார் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. ஏனெனில், அந்த சம்பவம் நடந்த அன்றிரவு அவன் எப்படியோ மிக ரகசியமாகக் கோயிலுக்குள் புகுந்துவிட்டான். பகுலனின் கண்களைக் குத்தியது பூசாரிதான்! பகுலன் மீது அவன் கொண்டு இருந்த தனிப்பட்ட விரோதத்தின் காரணமாக, தெய்வத்தின் பெயரைச் சொல்லித் தானே அவனைக் குருடாக்கிவிட்டான் என்று அவன் எண்ணினான்.

உண்மையை அறிந்த ஆதித்தனால் சும்மாயிருக்க முடியவில்லை. உடனே, பகுலனின் தந்தையைத் தனியே சந்தித்து, ''பகுலனை கபாலினி குருடாக்கவில்லை. பூசாரிதான் அந்த அக்கிரமத்தை செய்திருக்கிறான். உங்கள் அனைவரையும் குலதெய்வம் செய்தது என்ற சொல்லி ஏமாற்றி இருக்கிறான். அதனால் இந்த உண்மையை எல்லாருக்கும் எடுத்துச் சொல்வோம். அந்த பூசாரியின் அக்கிரமங்களுக்கு முடிவு கட்டுவோம்'' என்று முழங்கினான்.

ஆனால், பகுலனின் தந்தை அதை சிறிதும் நம்பவில்லை. ''கோயில் கதவை நம் அனைவர் முன்னிலையில் சாத்தி மூடிவிட்டான் பூசாரி! பிறகு நம்முடன் அவனும் திரும்பி வந்து விட்டான். அவன் வீட்டுக்குள் சென்று விட்டதை எல்லாரும் பார்த்தனர். அதனால் அவனால் யாருக்கும் தெரியாமல் கோயிலுக்குள் சென்று இருக்கவே முடியாது. ஆகவே, நீ சொல்வது தவறு! என் மகனின் கண்களை அம்மன்தான் குத்தி இருப்பாள்'' என்றார்.

''கடவுளே! உங்களைத் திருத்தவே

முடியாதா?'' என்று அலுத்துக் கொண்ட ஆதித்தன், தொடர்ந்து, ''ஐயா, பெரியவரே! கோயிலின் கருவறையில் ஒரு சுரங்கப் பாதை செல்கிறது. அது எங்கு போகிறது என்று பார்த்து விட்டு வாருங்கள். பிறகு, உங்கள் மகனின் கண்களை யார் குத்தினார் என்பது தெரியும்'' என்றான்.

அவன் சொற்படி அந்த முதியவரும் ரகசியமாக சுரங்கப் பாதையை சோதித்து விட்டுத் திரும்பி வந்து ஆதித்தனிடம், ''தம்பி! அந்த சுரங்கப்பாதை கோயிலிருந்து பூசாரியின் வீட்டுக்குச் செல்கிறது'' என்றார். ''பார்த்தீர்களா! இப்போதாவது நான் சொல்வதை நம்புங்கள்! பூசாரிதான் சுரங்கப்பாதை வழியாக அன்றிரவு கோயிலுக்குள் சென்று உங்கள் மகனைக் குருடனாக்கி இருக்கிறான்'' என்றான் ஆதித்தன்.

உடனே, அவனை வெகுநேரம் உற்றுப்பார்த்த அந்த முதியவர், ''எங்கள் இனத்தைச் சேர்ந்த எவனும் குலதெய்வத்தையோ, பூசாரியையோ சந்தேகிக்க மாட்டான். நீ ஆதிவாசி அல்ல எனத் தோன்றுகிறது. நீ எங்களைச் சேர்ந்தவனே அல்ல! உண்மையைச் சொல்! யார் நீ?'' என்றார். ஆதித்தனும் தான் யார் என்ற உண்மையை ஒப்புக்கொண்டான்.

அதிர்ச்சியடைந்த பகுலனின் தந்தை ஆதித்தனைத் தலையோடு கால்வரை உற்றுப் பார்த்தபின், ''அந்நியனான நீ எங்களிடையே புகுந்து உண்மையை தெரிந்து கொண்டு விட்டாய். நீ கண்டு பிடித்தவை ரகசியமாக இருப்பதுதான் நல்லது. நீ உயிருடன் இருந்தால் அது



ரகசியமாக இருக்காது. அதனால் நீ உயிரை விட வேண்டும். எங்கள் குல தெய்வத்தையும், பூசாரியையும் பற்றிய ரகசியத்தை நானும் தெரிந்து கொண்டதால், நானும் உயிர் வாழத் தகுதியற்றவன்! ஆக, நாம் இருவரும் சேர்ந்து உயிரை விடுவோம்!'' என்று சொல்லிவிட்டு, அவனை இழுத்துக் கொண்டு ஒரு குன்றின் உச்சியை அடைந்து, அவனுடன் சேர்ந்து தானும் கீழே குதித்தார். ஆனால், ஆதித்தன் கீழேயிருந்த சுனையில் விழுந்ததால் உயிர் தப்பினான். முதியவர் தரையில் விழுந்து உடல் சிதறி இறந்தார். ஆதித்தன் தன் ஊர் போய் சேர்ந்தான். ஆனால், யாரிடமும் எதுவும் சொல்லாமல், அந்த ரகசியத்தை தன் மனத்திலேயே வைத்து புதைத்து விட்டான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! ஆதிவாசிகளின் மூட நம்பிக்கைகளை அகற்றுவதையே லட்சியமாகக் கொண்டிருந்த ஆதித்தன் கடைசியில் ஏன் தன் லட்சியத்தைக் கைவிட்டான்? பூசாரியின் ஆக்கிரமத்தைப் பற்றி ஏன் யாரிடமும் புகார் செய்யவில்லை? தங்களுடைய இனத்தவரின் ரகசியத்தைத் தெரிந்து கொண்டதனால், பகுலனின் தந்தை அவனைக் கொல்ல முயற்சி செய்தாரே, அதிலிருந்து அவனுக்கு பயம் உண்டாகி விட்டதா? தன்னுடைய கோழைத்தனத்தின் காரணமாக, இலட்சியத்தை கைவிட்டானா? என் கேள்விகளுக்குப் பதில் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''ஒவ்வொரு மதத்திற்கும், ஒவ்வொரு இனத்திற்கும் குறிப்பிட்ட நம்பிக்கைகள் உண்டு. அது ஒன்றுக்கொன்று வேறுபடலாம். நமக்கு நியாயமாகத் தோன்றும் நம்பிக்கை, இன்னொருவனுக்கு முட்டாள்தனமாகத் தோன்றலாம். மேற்கூறிய கதையில், குல தெய்வத்தின் மீதிருந்த நம்பிக்கையும், பயமும் தான் கோடங்கு இனத்தவர்கள் குற்றம் புரியாமலிருக்கக் காரணமாக இருந்தது. தவிர பகுலன் மீதிருந்தத் தனிப்பட்ட விரோதத்தினால்தான் பூசாரி அவன் கண்களைக் குத்தியதாக ஆதித்தன் முதலில் தவறாக நினைத்து இருக்கலாம். பலவற்றையும் யோசித்த பின், நாகரீகமற்ற ஆதிவாசிகளிடையே அத்தகைய பயம், நம்பிக்கைகள் இருந்தால்தான், அவர்கள் குற்றம் புரியாமலிருப்பார்கள் என்று ஆதித்தனுக்கு தெளிவு உண்டாகி இருக்கலாம். அதனால் அந்த ஒரு ரகசியத்தை வெளியில் சொல்லாமல் மறைத்து விட்டான்'' என்றான்.

விக்கிரமனது சரியான பதிலினால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் தான் தங்கியிருந்த உடலுடன் பறந்து சென்று, மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது.



8

# சூர்யா

## மாணிக்கத்தைத் தேடுதல்

ஓவியம்: காந்தி அய்யா

சூர்யாவும், தார்விக்கும் சால்காசிக் காட்டில் சந்தித்து சண்டையிடப் போகும் நேரத்தில் பெண் ஓநாய் குறுக்கிட்டு, சூர்யாவை அந்த இடத்தை விட்டுப் போகச் செல்கிறது.

நீதான் விரும்பினாய், நினைவில் இல்லையா?

கவிதையை விட்டுவிட்டு முன்னே வா

ஓநாய் ஒரே பாய்ச்சலாக தார்விக் மீது பாய்கிறது. அதனால் தடுமாறினாலும், தார்விக் விரைவாக சமாளித்துக் கொண்டு...

... அந்த இருளிலும் ஒளிவீசும் தன் வாளை ஓநாயை நோக்கி வீச...

... ஓநாய் சாமர்த்தியமாக விலகிக் கொள்கிறது...

... ஒவ்வொரு முடியும் ஓநாய் மீது அவன் வீசும் வாள் குறி தவறுகிறது.


உன் கோபம்
உன்னை
அழித்து
விடும்.
யார் நீ?
ஒரு காலத்தில்,
ஒரு இளவரசி
இருந்தாள்.
ஓ! நீ அவள்
தானா! திரும்பி
வந்துவிட்டாயா?
நான்
போகவே
இல்லையே!


சற்றுத் தொலைவில் நின்று கொண்டு அதைக்காணும் சூர்யா.
என்னால் நம்ப முடிய வில்லை!


அந்த முனிவா சொன்னது... அப்படியானால் அவள்தான் மாரீகாவா?


நான் வேண்டுவது உனக்குத் தெரியுமா?


அப்படியானால் எனக்கு உதவி செய்வாயா?


தெரியும்.


கண்டிப்பாக உதவி செய்வேன்


இருவரும்
நண்பர்களாக
முயற்சிக்கிறார்
களே...


... அவள்
ஏன் என்னைக்
காப்பாற்றி
னாள்?




இல்லை.
இது அவள்
இல்லை.




அப்படி
என்றால் ஏன்
ஒரே
மர்மமாக
இருக்கிறது?

தொடரும்...



# இராமாயணம்

## யுத்த காண்டம் – 9

**சு**க்கிரீவனது தாக்குதலால் கும்பகர்ணனது உடல் முழுவதிலும் காயங்கள் ஏற்பட்டு ரத்தம் வெள்ளமாகப் பெருகி வழிந்தது. சற்று அவன் மலைத்தானாயினும் மீண்டும் அவன் போருக்கு எழுந்தான்.

போர்க்களத்தில் தன் முன் எதிர்ப் பட்ட வானரர்களையெல்லாம் பிடித்து அவன் விழுங்கலானான். இது கண்டு வானரர்கள் அவன் கைக்கு அகப்படாது ஓடலாயினர். இதைக் கண்டு இலட்சுமணன் கும்பகர்ணனை பல அம்புகளால் தாக்கலானான்.

கும்பகர்ணனோ அந்தத் தாக்குதலையெல்லாம் பொருட் படுத்தவில்லை. அவன் தான் பிடித்த வானரர்களையெல்லாம் விழுங்கிய வாறே இராமரை நோக்கிச் சென்றான்.

இராமர் ஒரு பயங்கரமான அஸ்திரத்தால் அவனது மார்பில் அடிக்க அவன் நெருப்பைக் கக்கியவாறே கீழே விழுந்தான்.

அவன் மீண்டும் எழுந்து வரமுடியாதபடி வானரர்கள் அவனது உடலின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டனர். ஆனால், கும்பகர்ணன் தன் உடலை ஒரு உலுக்கு உலுக்கவே வானரங்கள் நாவல்பழம் உதிர்ந்து விழுவது போலக் கீழே விழுந்தனர். கும்பகர்ணனோ எழுந்து வந்து இராமரை நோக்கிச் சென்றான்.

இராமரோ அவனைப் பார்த்து ''கும்பகர்ணா, நீ இந்திரனை வென்று இருக்கலாம். ஆனால், நான் இந்திரனல்ல, இராமன் என்பதை நினைவில் வைத்துக்கொள்'' என்றார்.





அதற்குக் கும்பகர்ணனும் ''நானும் கரனோ, கபந்தனோ, வாலியோ அல்ல. கும்பகர்ணன்'' என்றான்.

இராமர் ஓரிரண்டு அம்புகள் எய்ய அது கும்பகர்ணனை எதுவும் செய்ய வில்லை. ஏழு மரங்களைத் துளைத்த அம்புகளோ வாலியைக் கொன்ற அம்போ இந்த கும்பகர்ணனை அசைக்கக்கூட முடியாது போயின.

இராமர் வாயு அஸ்திரத்தை எடுத்து விட்டார். அது கும்பகர்ணனது ஒரு கையை அறுத்து வீழ்த்தியது. அது கண்டு கோபம் கொண்ட கும்பகர்ணன் தனது மற்ற கையால் ஒரு மரத்தையே பெயர்த்து எடுத்து வந்தான். இராமர் அந்தக் கையை இந்திரஸ்திரம் கொண்டு அறுத்து வீழ்த்தினார். அதன் பின்னர் இரு அம்புகளால் அவனது இரு கால்களையும் துண்டித்தார்.

கும்பகர்ணன் வேரற்ற மரம்போல சாய்ந்து விழுந்தான். தன் வாயை குகை போலாக்கி அவன் சுற்றிலும் இருந்த வானரர்களையெல்லாம் விழுங்க முயன்றான். இராமர் அந்த வாயை அம்புகளால் மூடினார். பின்னர், மற்றொரு அம்பினால் அவனது தலையைத் துண்டித்தார்.

இவ்விதமாக கும்பகர்ணன் இறந்து விழுந்தான். இது இராவணன எதிர்பார்க்காத ஒரு சம்பவம். கும்பகர்ணன் இறந்தது கண்டு அரக்கர்கள் அலறினர். வானரர்களோ ஆனந்தக் கூத்தாடினர்.

கும்பகர்ணன் இறந்தானென்ற செய்தி கேட்டு இராவணனே 'ஆ' வென அலறிக் கீழே விழுந்து விட்டான். பின்னர் மெதுவாகச் சமாளித்து எழுந்து தன் தம்பிக்காக கண்ணீர் வடிக்கலானான்.

அப்போது திரசிரனும் அதிகாயனும் இராவணனுக்கு ஆறுதல் கூறினர். அவர்கள் ''நீங்கள் கவலைப் படாதீர்கள். நாங்கள் எல்லாருமாக ஒன்று சேர்ந்து எதிரிகளைத் தாக்குகிறோம். அப்போது அவர்களால் என்ன செய்ய முடியும்? எங்கள் தாக்குதலைச் சமாளிக்க முடியாது அடிபணிவார்கள்'' எனக் கூறினர். பின்னர் அவர்கள் தேகாந்தகன், நராந்தகன், மகோதரன், மகாபார்சுவன் என்பவர்களை அழைத்துக் கொண்டு தாமதியாது போர்க்களத்திற்கு சென்றனர். மீண்டும் அரக்கர்களுக்கும் வானரர்களுக்கும் இடையே கடும் போர் மூண்டது. நராந்தகன் வானர

சேனைக்குள் புகுந்து பலரை அடித்து வீழ்த்தினான். அப்போது அங்கதன் அவனை எதிர்க்கலானான். நராந்தகன் ஒரு ஈட்டியை எடுத்து அங்கதனின் மீது விட்டெறிந்தான்.

அந்த ஈட்டி முறிந்துபோயிற்றே ஒழிய அங்கதனுக்கு எவ்விதக் கெடுதலையும் செய்யவில்லை. அங்கதன் அடித்த அடியில் நராந்தகனது இரதத்தின் குதிரை இறந்து விழுந்தது. அதனால் ஆத்திரம் அடைந்து அவன் அங்கதனது தலைமீது ஓங்கியடித்தான். அங்கதனின் தலையில் காயம் ஏற்பட்டு இரத்தம் கசியலாயிற்று. அங்கதனும் ஆத்திரம் அடைந்து நராந்தனனின் மார்பில் அடிக்கவே அவன் இரத்தம் கக்கியவாறே கீழே விழுந்து இறந்தான்.



அதைக் கண்டு மகோதரனும் தேகாந்தகனும் திரிசிரனும் அங்கதன் மீது பாய்ந்தனர். அவர்களது தாக்குதல்களையும் அவன் தன்னந் தனியனாகவே சமாளிக்கலானான். இதற்குள் அனுமாரும் நீலனும் அங்கு வந்து சேர்ந்தனர்.

இப்போது மிக உக்கிரமாயிற்று. அனுமார் தேகாந்தகனின் தலையில் ஒரு அடி அடித்து அவனைக் கொன்றார். பின்னர் திரிசிரனை எதிர்த்து அவனது வாளைக் கொண்டே அவனது உயிர்போகும்படி செய்தார்.

அப்போது மகாபார்சுவன் ஒரு கதையை எடுத்துக் கொண்டு வானரர்களை எதிர்க்கலானான். ரிஷபன் என்ற வானரவீரன் அவனை எதிர்க்கலானான். இருவரும் போர் புரியலாயினர். ரிஷபன் சட்டென மகாபார்சுவனின் கதையைப் பிடுங்கி அதனாலேயே அவனைக் கொன்றான்.

இப்படியாக அரக்கர்களில் பலசாலிகள் ஒவ்வொருவராக மடிந்து விழவே எஞ்சியவர்கள் ஓட்டமெடுத்தனர். இதைக் கண்ட அதிகாயன் கோபம் கொண்டு தன் வீரர்களுக்கு உற்சாகமூட்டி வானரர்களைத் தாக்கச் செய்தான்.

அவனது இடிபோன்ற தாக்குதலும் கும்பகர்ணனது போலவே மிகக் கடுமையாகவே இருந்தது. அதைக் கண்ட இராமர் ''இவன் யார்?'' என விபீஷணனிடம் கேட்டார். ''இவன் தான் யமாலினி என்பவளுக்குப் பிறந்தவன். இராவணன்தான் இவனது தந்தை. இவனை ஒழிக்கா விட்டால் நம்படைக்கு பெருத்த சேதமே ஏற்படும்'' என்றான்.



இதே சமயம் அதிகாயனும் பெருத்த ஆரவாரத்துடன் வானரப் படைகளிடையே புகுந்து விட்டான். குமுதன், மைந்தன், நீலன், சரபன் முதலானோர் ஒன்றுகூடி அவனை எதிர்க்கலாயினர். அவர்களை எல்லாம் அவன் தன் அம்புகளைக் கொண்டு தாக்கியவாறே இராமர் இருக்கும் இடத்தை அடைந்தான்.

அவரிடம் அவன் ''நான் சாதாரண போர் வீரர்களோடு போர் புரிய மாட்டேன். எனக்குச் சமமானவன் யார் இருக்கிறான் இங்கே?'' என்றான் இதைக் கேட்ட இலட்சுமணன் ''தம்பி ரொம்பவும் துள்ளாதே'' என்றான்.

அப்போது அதிகாயன் ''ஐயோ பாவம். நீயா என்னை எதிர்க்கப் போகிறாய்? வீணாக உயிரை இழக்கப் போகிறாய்'' எனக் கூறி போர் புரியலானான். அம்புகள் இரு தரப்பிலிருந்தும் மழை போலப் பொழிந்து கொண்டே இருந்தன. இலட்சுமணனால் அதிகாயனின் கவசத்தைத் துளைத்து அம்பை எய்து அவனைக் கொல்ல முடியவில்லை. எனவே, பிரம்மாஸ்திரத்தை விட்டு அவனது தலையைத் துண்டித்தான்.

போர்க்களத்திற்குச் சென்ற ஆறு அரக்க வீரர்களும் அழிந்து போயினர் எனக் கேட்டு இராவணன் மிகவும் வருத்தமடைந்தான். அப்போது இந்திரஜித்து இராவணனிடம், ''தந்தையே, நான் இருக்கும்போது ஏன் கவலைப்பட வேண்டும்? நான் இப்போதே போய் அந்த இராமனையும், இலட்சுமணனையும் கொன்று வருகிறேன்'' எனக்கூறி போர்க்களத்திற்குச்சென்றான். தேர்மீது ஏறி யானைகள்மீது பல வீரர்கள் அமர்ந்துவர அட்டகாசம் செய்தவாறே இந்திரஜித் தன் போர்க்களம் சென்றான். போர்க்களத்திலேயே ஒரு ஹோமம் செய்து ஒரு ஆட்டையும் பலி கொடுத்தான். பின்னர் அவன் தன் இரதத்தோடு ஆகாயத்தில் மறைந்து நின்று போர் புரியலானான்.

வானர வீரர்களான கந்தமாதனன், நளன், மைந்தன், கஜன், ஜாம்பவந்தன், சுக்கிரீவன், ரிஷபன், அங்கதன், திவிதன் முதலானோர் மறைந்திருந்து தாக்கும் இந்திரஜித்தின் முயற்சிகளை எல்லாம் முறியடிக்க ஆயினர். பல வானரர்கள் காயமுற்றனர். சிலர் மயக்கமுற்றனர். வேறு பல வானரர்கள் இறந்தும் போயினர்.



இந்திரஜித் எங்கிருந்து போர் புரிகிறானென்பது வானரப் படையினருக்குத் தெரியவில்லை.

இந்திரஜித்தின் அம்புகள் இராமர் மீதும் இலட்சுமணன் மீதும் விழுந்தன. அப்போது இராமர் இலட்சுமணனிடம், ''இந்த இந்திரஜித்தை எப்படி ஒழிப்பது? நாமும் இவனது தாக்குதலால் இறந்து விழுந்தது போல கிடந்தால் இவன் தன் தாக்குதலை நிச்சயம் நிறுத்திக் கொள்வான்'' என்றார்.

இலட்சுமணனும் அப்படியே செய்யலாமெனக் கூறவே இருவரும் பொத்தெனக் கீழே விழுந்தனர். அதைக் கண்ட இந்திரஜித் மிகவும் சந்தோஷப்பட்டவனாக போர்க் களத்தில் இருந்து இலங்கைக்குள் சென்றான்.

இராமரும், இலட்சுமணனும் விழுந்தது கண்டு வானரர்கள் அதிர்ச்சி உற்றனர். அவர்கள் சுக்ரீவன், நீலன், அங்கதன், ஜாம்பவந்தன் முதலானோரும் மூர்ச்சையடைந்து கிடப்பதைப் பார்த்தனர்.

விபீஷணன், வானரர்களிடம் ''கவலைப்படாதீர்கள். இராமரும், இலட்சுமணனும் தம் நினைவு இழந்து கிடக்கவில்லை'' என்றான்.

அப்போது இருட்டுவேளை. யார் யார் எப்படி இருக்கிறார்களென்று கூடச் சரியாகத் தெரியவில்லை. விபீஷணனும், அனுமாரும் ஒவ்வொரு உடலாகப் பார்த்துக் கொண்டே வரலாயினர். இந்திரஜித்தன் அன்று வானரப் படைகளுக்கு விளைவித்த சேதம் கொஞ்ச நஞ்சம் அல்ல. அனுமாரும், விபீஷணனும் ஜாம்பவந்தனைத் தேடிக் கண்டு பிடித்தனர்.

அப்போது ஜாம்பவான் ''யார் பேசுவது? விபீஷணனா? எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. எனக்கு பார்வையே போய்விட்டது எனப் போலிருக்கிறது. இங்கு அனுமான் இருக்கிறானா?'' எனக்கேட்டான்.

அதற்கு விபீஷணன் ''ஓ! நீங்கள் இராமரையோ, இலட்சுமணனையோ, சுக்கிரீவனையோ அல்லது அங்கதனையோ பற்றிக் கேட்காமல் அனுமானைப் பற்றி மட்டும் அக்கறையுடன் விசாரித்தீர்களே இதற்கு ஏதாவது காரணம் உண்டோ?'' எனக் கேட்டான்.

அதற்கு ஜாம்பவான் ''இந்த

வாழ்த்துகள்!
இராமாயணப் புதிர்ப்போட்டி
ஜூலை–2009 விடை : B
BV.S. ரூபிகா, சேலம்.

வானரப்படையே அழிந்தபோதிலும் அனுமான் ஒருவன் இருந்தால் போதும். இந்த அரக்கர்களை எல்லாம் அழித்து விடலாம். அனுமான் இல்லாது வானரப்படை இருந்து எவ்வித யனும் இல்லை'' என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டே இருந்த அனுமார் ஜாம்பவந்தனை அணுகி அவனை வணங்கி நின்றார். அனுமாரின் குரலைக் கேட்டதுமே ஜாம்பவந்தனின் முகம் மலர்ந்தது. அவன் அனுமாரைத் தன்னருகே வரும்படி சொன்னான். அனுமாரும், ஜாம்பவானருகே சென்றார். அப்போது அவன் ''இந்த வானரர்களை எல்லாம் காக்கும் பொறுப்பு உன்னுடையதே ஆகும். இந்த வேலையை வேறு யாராலும் செய்யவும் முடியாது. நீ இப்போதே இமயமலையை நோக்கிப் போ. அங்கே கைலாசம், ரிஷபம் என்னும் இரு மலைகளுக்கிடையே மூலிகை மலை உள்ளது. அதில் நான்கு சக்தி வாய்ந்த மூலிகைகள் உள்ளன. அவை வைசல்யகரணி, மிருத சஞ்சீவினி, சுவர்ணகரணி, சந்தானகரணி எனப்படுவன. அவற்றை நீ எடுத்துக் கொண்டு விரைவில் வா'' என்றான்.

அனுமார் உடனே அங்கிருந்து கிளம்பினார். அவரது உடல் முன்போல பெரிய உருவம் கொண்டது.

*(தொடரும்)*

## அம்புலிமாமா இராமாயணப் புதிர்ப் போட்டி

ஆதிகாயனின் தாய் யார்?
(a) சிம்ஹிகா; (b) மண்டோதரி;
(c) தன்யமாலினி.

உங்களுடைய பதிலை CRQ <a/b/c> to 54646க்கு SMS செய்யுங்கள்.

சரியான பதிலளிக்கும் வாசகர்களில் அதிருஷ்டசாலியான ஒருவருக்கு மட்டும் சந்தாமாமாவின் 'காமிக் காம்போ பேக்' பரிசாக அளிக்கப்படும்.






# கூழாங்கல் சூப்

ஒருநாள், நீண்ட நேரமாக நடந்து கொண்டிருந்த ஒரு பயணி மாலை மயங்கும் நேரத்தில் ஒரு கிராமத்தை அடைந்தான். அன்றிரவு தங்குவதற்கு எந்த வீட்டிலாவது இடம் கிடைக்குமா என்று தேடினான். அதற்குள் இருள்சூழ, குளிர் உடலை வாட்டி வதைத்தது. எங்காவது சூடாக சாப்பிட்டுவிட்டு, குளிருக்கு அடக்கமாக போர்த்திக்கொண்டு படுத்தால் நன்றாயிருக்கும் எனத் தோன்றியது. ஒரு தெருக்கோடியில் தனியாகயிருந்த ஒரு குடிசையை நோக்கி நடந்து அதன் கதவைத் தட்டினான். அதுபோன்ற குடிசை வீடுகளில் தான் அடைக்கலம் கிடைக்கும் என்று தோன்றியது.

குடிசையின் கதவு திறந்தது. ஒரு கிழவி வெளிப்பட்டாள். அவளைப் பார்த்து, ''எனக்கு இன்று தங்குவதற்கு இடம் தருவாயா?'' என்று வேண்டினான். ''முடியாது. இது என்ன சத்திரமா?'' என்று சூடாக பதிலளித்து விட்டுக் கதவை மூட முயன்ற கிழவியிடம் பல முறை பயணி கெஞ்சினான். கடைசியில் மனம் இளகிய கிழவி ''சரி! உள்ளே வந்து படு! ஆனால், எனக்கே சாப்பிட ஒன்றுமில்லை. அதனால் உனக்கு எதுவும் சாப்பிட கொடுக்க முடியாது!'' என்று சொல்லிவிட்டு, உள்ளே அழைத்துச் சென்றாள்.

சாப்பிட எதுவும் கிடைக்காத பயணி தரையில் படுத்து உருண்டான். பசியினால் அவனுக்குச் சிறிது கூட தூக்கமே வரவில்லை. சற்றுநேரம் புரண்டு, புரண்டு படுத்த பிறகு அவன் கிழவியை நோக்கி, ''கிழவி! உன்னுடைய இரும்பு சட்டியை உபயோகப்படுத்த என்னை அனுமதி தந்தால், உனக்கு நான் கூழாங்கல் சூப் செய்து தருவேன்.



அதை நீயும் சாப்பிட்டு, நானும் சாப்பிடலாம்'' என்றான்.

''கூழாங்கல் சூப்பா? அப்படி ஒன்றை நான் கேள்விப்பட்டதே இல்லையே!'' என்று கிழவி ஆச்சரியத்தோடு கூற ''அதெல்லாம் என்னைப் போன்ற பயணிகளுக்குத் தான் தெரியும்!'' என்று சொன்னான். உடனே, கிழவி உற்சாகத்தோடு எழுந்து வந்தாள். ''அப்படியானால் உடனே செய்! பக்கத்து வீட்டுக்காரியிடம் நாளைக்கு அதைப்பற்றிச் சொல்லி அவளை பொருமைப்படச் செய்வேன்'' என்ற கிழவி, அவனை சமையலறைக்கு அழைத்துச் சென்று இரும்புச் சட்டியைக் கொடுத்தாள். உடனே அதில் தண்ணிரை நிரப்பி, அடுப்பைப் பற்ற வைத்து, அடுப்பில் தண்ணீரைச் சுடவைத்தான். பிறகு தன் சட்டைப் பையிலிருந்து ஒரு கூழாங்கல்லைப் போட்டு கொதிக்க வைத்தான்.

சிறிது நேரம் சென்றபின், அதை ருசி பார்த்த அவன், ''கிழவி! சூப் சரியாகத் தான் இருக்கிறது. ஆனால், இதில் சிறிது ஓட்ஸ் மாவு கலந்தால் இன்னும் ருசியாக இருக்கும்'' என்றான். ''ஓட்ஸ் தானே! என்னிடம் சிறிது இருக்கிறது!'' என்ற கிழவி ஒரு டப்பாவிலிருந்து ஓட்ஸ் எடுத்துக் கொடுக்க, அவன் அதை சூப்பில் சேர்த்தான்.

''முன்னைவிட இப்போது பரவாயில்லை. ஆனால், சிறிது உருளைக்கிழங்கு மட்டும் இருந்தால், சூப் இன்னும் நன்றாக இருக்கும்!'' என்று அவன் ''கூடையில் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கிறேன்'' என்ற கிழவி, சில உருளைக்கிழங்கு களையும், ஒரு தக்காளியையும் எடுத்து தந்தாள். ''சபாஷ்! இப்போது சூப் என்ன பிரமாதமாக இருக்கும் என்று பார்!'' என்று உற்சாகத்துடன் கூறிய அவன், கிழங்குகளையும், தக்காளியையும் துண்டு துண்டாக நறுக்கி, சூப்பில் போட்டான்.

பிறகு, ஒரு தேக்கரண்டியால் சூப்பை சற்றே ருசி பார்த்த அவன், ''ஐயோ! அமர்க்களமாக இருக்கிறது'' என்று நாக்கை சப்புக் கொட்டிக் கொண்டதைப் பார்த்துக் கிழவிக்கு நாக்கில் நீர்



நீர்ப் பசாசு அறிவுரை கேட்ட கதை...tamil.chandamama.com தளத்தில் படியுங்கள்



ஊறியது. ''இதில் சிறிது மாட்டிறைச்சி மட்டும் சேர்த்தால் போதும்! அமிர்தம் போல் இருக்கும்'' என்று அவன் சொல்ல, கிழவி உற்சாகத்துடன் துள்ளிக் குதித்துக்கொண்டே சமையலறையில் உள்ள டப்பாக்களையெல்லாம் திறந்து திறந்து பார்த்தாள். அவற்றுள் ஒன்றில் உப்பிட்டுப் பதப்படுத்தப்பட்ட மாட்டு இறைச்சி இருக்கக் கண்டு, அவள் மிகுந்த மகிழ்ச்சியுடன் தர, அவற்றில் சில துண்டுகளைப் போட்டு அவன் சூப்பைக் கிளறினான்.

''இதில் வெங்காயம் போட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!'' என்று கிழவியே கேட்டாள். தன்னுள் பொங்கி வரும் உற்சாகத்தை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை. ''நன்றாக இருக்குமா! சரியாகப் போயிற்று போ! வெங்காயம் மட்டும் சேர்த்தால், நம்ம ஊர் ராஜாவே இதில் பங்கு கேட்டு ஓடி வந்து விடுவார்'' என்று அவன் உற்சாகமுட்ட, அடுத்த நொடியில் கிழவி வெங்காயம் கொண்டு வந்தாள். அதை நறுக்கிப் போட்டபின், அவன் சூப்பை நன்றாகக் கொதிக்க வைத்தான். அதற்குள் கிழவி குடுகுடுவென ஓடிச் சென்று, இரண்டு தட்டுகளில் பிரெட்டுடன் வந்தாள். ''கூழாங்கல் சூப்புடன் பிரெட்டும் சேர்ந்தால் நன்றாக இருக்குமே என்று தோன்றியது'' என்று கிழவி கூற, ''நன்றாகவா? ஆளைத்தூக்கும்!'' என்றவன், அடுப்பை அணைத்தான்.

''வா, கிழவி! சாப்பிடு!'' என்று அவன் சூப்பை தட்டுகளில் வார்த்து அழைக்க, கிழவி ஆவலுடன் அதை ரசித்துக் சுவைத்தாள். தன் வாழ் நாளிலேயே அத்தனை சுவையான சூப் குடித்ததேயில்லை என்று அவளுக்குத் தோன்றியது. பாத்திரத்தில் உள்ள சூப்பை இருவரும் குடித்து முடித்தனர். அந்தக் கூழாங்கல் மட்டுமே பாத்திரத்தில் மிஞ்சியது. ''நிஜமாகவே அந்தக் கூழாங்கல்லில் ஏதோ மாயம் இருக்கிறது'' என்று கிழவி சொல்ல, அவன் அதைக் கேட்டு சிரித்தான்.

மறுநாள் கிழவியிடமிருந்து விடை பெற்றுக்கொண்ட பயணி, ''எனக்கு இரவு தங்க இடமும், சூப் செய்ய பாத்திரமும் கொடுத்ததற்கு நன்றி! அதற்காக இந்த மாயக் கூழாங்கல்லை உனக்குப் பரிசாக அளிக்கிறேன்'' என்று கொடுத்துவிட்டுச் சென்றான்.

# ஜாதகக் கதை

## வினோதமான பெயர்-2

*மன்னர் முனிவரிடம் சென்று–*

சுவாமி! என்னை ஆசீர்வதியுங்கள்!

எதற்கு வந்தாய்? பொருளைத் தேடியா? அல்லது பெண்ணைத் தேடியா?

ஏன் கோபப்படுகிறீர்கள் சுவாமி?

பின், நீ ஒரு பெண்ணுக்காகத் தானே இங்கே வந்து இருக்கிறாய்?

ஆம் சுவாமி! அது உங்கள் பெண் தான்!

ம், தெரியும்! மகளே! உனக்கு சம்மதமா?

அவர் என் பெயரை சரியாக ஊகிக்க முடிந்தால்தான்...!

அதுதான் சரி!

அவள் பெயர் எது என்று எப்படி கண்டுபிடிப்பது!

சரியாக ஊகிக்கும் வரை இங்கேயே தங்கிவிடு!


அறிஞர்களைக் கலந்தாலோசித்து ஒரு பட்டியலுடன் மன்னர் வருகிறார்.
சவாலுக்கு நான் தயார். சுவாமி!
சரி, சொல்!
சொல்லப்படும் ஒவ்வொரு பெயரும் தவறாகவே இருக்கிறது.
ஆதிரா?
சந்திரவதனி?
சுந்தரி?


பெயரை ஊகிப்பதற்காக, பலநாள்கள் மன்னர் அங்கேயே தங்கி விடுகிறார்.
அவர் உண்மையாகவே என்னை நேசிக்கிறார்.


என்னால் கண்டுபிடிக்க முடியுமா என்று சந்தேகமாக இருக்கிறதே!
இப்போது சொன்னதுதான் என் பெயர்!


என்ன? 'ஆசங்கா' என்பது தான் உன் பெயரா?
மன்னா! வெற்றி பெற்றாய்! ஆசங்காவை இனி நீ கரம் பிடிக்கத் தடையில்லை.
நன்றி சுவாமி!
MAHE...
முற்றும்

# வேத கணிதம்



இந்த இதழுக்கான புதிர் :

ஸ்கூல் ஆண்டு தினத்தையொட்டி, விருந்தினர்கள், ஆசிரியர்கள், இதரப் பணியாளர்கள் ஆகியோருக்குப் பூச்செண்டுகள் தருவதாகத் தீர்மானிக்கப்படுகிறது. ஒரு செண்டில் 17 ரோஜாக்கள், 13 சூரியகாந்தி, 9 அல்லிப்பூக்கள் உள்ளன. அவற்றின் விலைகள் முறையே ரோஜா ஒன்று ரூ. 2, சூரியகாந்தி ஒன்று ரூ. 3, அல்லி ஒன்று ரூ. 4! பூச்செண்டு பெறுபவர்களின் விவரங்கள் : பள்ளி முதல்வர் 1, துணை முதல்வர்கள் 2, பிரதம விருந்தாளி 1, பிரதம நிர்வாகி 1, நடுநிலை பள்ளியாசிரியர்கள் 62, இளநிலை ஆசிரியர்கள் 40! கடைக்காரர் மொத்த விலையில் 10 சதவீதம் தள்ளுபடி செய்தார். பூச்செண்டுகளுக்கான மொத்த செலவு என்ன? விடையை மிக விரைவாகக் கண்டுபிடிக்கும் சூத்திரம் என்ன?

*பின்குறிப்பு:* இதற்கான வேதகணித ஃபார்முலா நவம்பர் இதழில் வெளியாகும்.

சரியான ஃபார்முலா எழுதியனுப்புபவர்களுக்கு ரூ. 500 பரிசளிக்கப்படும். ஒருவருக்கு மேல் அதிகமான நபர்கள் சரியான விடையளித்தால், ஒவ்வொருவருக்கும் ரூ. 100 வீதம் பரிசளிக்கப்படும். உங்கள் விடைகளை செப்டம்பர் மாதம் 30ஆம் தேதிக்குள் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பவும்.

ஆசிரியர், அம்புலிமாமா இந்தியா லிமிடெட்,
2/513 (ப.எ.3/396), சந்தீப் அவென்யூ ஈஸ்ட், 2வது மெயின் ரோடு,
சின்ன நீலாங்கரை, சென்னை – 600 041 என்ற முகவரிக்கு அனுப்பவும். அல்லது contests@chandamama.com என்ற முகவரிக்கு மின்னஞ்சல் செய்யுங்கள்.

---

**கடந்த ஜூலை மாதப் புதிருக்கான சரியான வழி இதோ!**

1. அந்த எண்ணை அப்படியே எழுதிக் கொண்டு, அதற்கும், நூறுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கணக்கிட்டு அந்த எண்ணுடன் கூட்டவும்.

107 – 100 = 7; 107 + 7 = 114 இதுவே இடப்பக்க எண்கள்.

2. மேற்கண்ட வித்தியாசத்தை அதே எண்ணால் பெருக்கவும்.

7 x 7 = 49 இதுவே விடையின் வலப்பக்கம்.

இத்துடன், 30 நாள்களுக்கான செலவையும் கண்டுபிடிக்க வேண்டியுள்ளது.

107 ஆள்களுக்கு ஒரு வாரச் செலவு ரூ. = 11449

107 ஆள்களுக்கு ஒரு நாளையச் செலவு ரூ. = 11449 / 7

107 ஆள்களுக்கு 30 நாள்களுக்கான செலவு ரூ. 11449 / 7 x 30 = 1635.6 x 30 = 16356 x 3 = ரூ. 49068

***ரஞ்சனி மகாதேவன்*** **ஜூலை மாதப் போட்டியில் வெற்றி பெற்றவர் ஆவார்.**

# ஹோவர்கிராஃப்ட்




**தேவையான பொருள்கள் :**

ஒரு பலூன், பழைய குறுந்தட்டு (CD), பிரில் பாட்டில் மூடி, அழுத்தமான பசை.

**செய்முறை :**

- பிரில் பாட்டில் மூடியை சிடியின் நடுவிலுள்ள ஓட்டையில் பொருத்தி ஒட்டுங்கள்.
- அந்த மூடியை ஒட்டுவதற்கு முன்னால் அழுத்தி மூடுங்கள்.
- பலூனின் வாயை விரித்து மூடியின் மீது பொருத்துங்கள்.
- இப்போது சிடியின் மறுமுனையிலிருந்து வாயினால் பலூனை ஊதுங்கள்.
- பலூனை ஊதிப் பெரிதாக்கிய பின்னரும் அதை மூடியில் பொருத்தலாம்.
- இப்போது உங்கள் ஹோவர்கிராஃப்ட் ரெடி!
- இதை வழவழப்பான தரையில் வைத்தால் அது வழுக்கிக் கொண்டு செல்வதைப் பார்க்கலாம்.
- தரை மிகவும் வழவழப்பாக இருந்தால் மட்டுமே ஹோவர் கிராஃப்ட் இயங்கும் என்பது நினைவிருக்கட்டும்.

**தத்துவம் :**

ஹோவர்கிராஃப்ட் என்பது மெல்லிய காற்றுப் படலத்தின் மீது வழுக்கிக் கொண்டே செல்லும் வாகனம் ஆகும். காற்று தமிழ்களையும், படலத்தையும் வழவழப்பான தரையில் உருவாக்கும் வகையில் இந்த வாகனம் வடிவமைக்கப்படுவதால், அதே காற்றுப் படலத்தின் மீது இது சொகுசாக வழுக்கிக் கொண்டு செல்லும்.

# அம்புலிமாமா பொது அறிவுப் போட்டி-8

(16 வயதிற்குட்பட்ட சிறுவர்களுக்கு)

Co-sponsored by Infosys FOUNDATION, Bangalore

**சரியான விடைகள் அளிக்கும் வாசகருக்கு ரூ 250 பரிசு★ கிடைக்கும்.**

*★ ஒருவருக்கும் மேற்பட்டவர்கள் சரியான விடை அளித்திருந்தால், அனைவருக்கும் 50 ரூபாய் பரிசாக வழங்கப்படும்.*

நீங்கள் செய்ய வேண்டியவை:

1. விடைகளை எழுதுங்கள்,
2. உங்களுடைய பெயர், வயது மற்றும் பின்கோடுடன் கூடிய முழு முகவரியைக் குறிப்பிடுங்கள்,
3. சந்தாதாரர் எனில், அந்த எண்ணைக் குறிப்பிடவும்,
4. உறையில் **அம்புலிமாமா பொது அறிவுப் போட்டி**-8 என்று குறிப்பிட்டு, அம்புலிமாமாவின் முகவரிக்கு அனுப்புங்கள்,
5. செப்டம்பர் மாத இறுதிக்குள் உங்கள் விடைகள் எங்களை வந்து அடைய வேண்டும்,
6. நவம்பர்'09 இதழில் முடிவு வெளியாகும்.

## மொழிகள்...



1. இந்தியாவின் இலக்கியவளம் நிறைந்த செம்மொழிகள் யாவை?
2. பௌத்தர்கள், சமணர்கள் ஆகியோர் தங்கள் மத நூல்களை எந்த மொழியில் இயற்றியுள்ளனர்?
3. பாகிஸ்தானின் தேசிய மொழி எது?
4. ரவீந்திரநாத் தாகூர் ''கீதாஞ்சலி''யை எந்த மொழியில் இயற்றினார்?
5. மொழிகளைப் பற்றிய கல்விக்கு என்ன பெயர்?
6. உலகில் மிக அதிகமான மக்களால் பேசப்படும் மொழி எது?
7. இந்திய அரசியல் நிர்ணய சட்டத்தினால் அங்கீகரிக்கப்பட்டுள்ள மொழிகள் எத்தனை?
8. எந்த இரண்டு நாடுகளின் தேசிய கீதம் வங்காள மொழியில் அமைந்துள்ளது?

# போட்டோ வாக்கியப் போட்டி

இந்த போட்டோக் களுக்கு தொடர்பு உடையதாக இருக்கும் சிறு வாக்கியங்களை எழுதி அனுப்புங்கள்.



S. BALASUBRAMANIAN



S. BALASUBRAMANIAN



வாக்கியங்களை எழுதி 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு நவம்பர் 2009 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, புதிய எண் 2/513, (ப.எண் 3/396) சந்தீப் அவென்யூ, கிழக்கு, 2 வது மெயின் ரோடு, சின்ன நீலாங்கரை, சென்னை-600 041.**

## வாழ்த்துகள்!

க. அகல்யா
7, நடுநிழற்சாலை,
இரயில்விகார்,
கருணாநிதி நகர்,
திருச்சி–620 021.

## பரிசு பெற்றவை





பாயத் துடிக்குது இளமை;
பாரம் சுமக்குது முதுமை.

## அம்புலிமாமா பொது அறிவுப்போட்டி – 6 ஜூலை 2009

### விடைகள்:

1. ராஜா ஹரிச்சந்திரா, 1913, தாதா சாகிப் பால்கே; 2. கிசான் கன்யா;
3. ஆலம் ஆரா; 4. சோட்டா சேத்தன்; 5. பானு அத்தையா;
6. ஜத்தன் பாயி; 7. மம்முட்டி; 8. இந்திரசபா, 71.

*குறிப்பு: வாசகர்களிடமிருந்து சரியான பதில் வராததால் யாருக்கும் பரிசு வழங்கவில்லை.*

அம்புலிமாமா காதநாயகர்கள் அனைவரும் tamil.chandamama.com தளத்தில்

# போருக்கு ஏற்பாடு

*(என் சட்டையைப் பிடித்திழுத்த புஷ்பா என்னை பார்த்து ''அநுநிர்வாவுக்கு உங்களை வரவேற்கிறோம்'' என்றாள். பாரதி ''அநுநிர்வா வந்துவிட்டது'' என்றார்–)*

**உ**ற்சாகமேயில்லாமல் ஒருவித மனக்கலக்கத்துடன் நான் சோர்வாக சாய்ந்து கொண்டிருந்தேன். ஆனால், தாத்தாவோ சிறிதும் கவலையோ, பதற்றமோ இல்லாமல் தாஜ்மகாலைப் பார்த்து ரசிக்கும் வெளிநாட்டுப் பயணிபோல் சுற்றுப்புற காட்சிகளை ரசித்துக் கொண்டு இருந்தார். இடையிடையே, சகபயணிகளையும் வெகுவாக ரசித்தார்.

''இதன் காதுகளைப் பாரேன்! முறம் மாதிரி இருக்கிறது! அடேயப்பா!'' என்று சீன யானையின் பிரம்மாண்டமான காதுகளைத் தாத்தா தடவி கொடுத்ததைப் பார்க்க வினோதமாக இருந்தது. அந்த சூழ்நிலையில் ஒரு சிறு குழந்தையைப் போல் எப்படி அவரால் நடந்து கொள்ள முடிகிறது! யானை தன் காதுகளை விடாமல் ஆட்டிக் கொண்டேயிருந்தது. அதைப் பார்த்ததும் மகாபாரதம் தொலைக்காட்சி சீரியலில் திருதராஷ்டிரரின் இரு பக்கமும் நின்று கொண்டு ஓயாமல் கைவலிக்க மயிலிறகு விசிறிகளை விசிறிக் கொண்டிருக்கும் சேடிப் பெண்களின் ஞாபகம் வந்தது. லட்டு மிகுந்த உற்சாகத்துடன் வாலை ஆட்டிக் கொண்டேயிருந்தது. அதை சீண்டலாமா என்று நான் எண்ணிய போது என் கவனத்தை பாரதியும், புஷ்பாவும் திசை திருப்பினர்.




இருவரும் அந்த வரிக்குதிரை கோவாவுடன் கிசுகிசுவென்று ஏதோ ரகசியம் பேசியதைக் கண்டு என் வயிற்றில் மறுபடியும் கலக்கம் ஏற்பட்டது. ரகசியம் பேசி முடித்தவுடன், பாரதி எங்களைப் பார்த்து, ''கப்பலை மூழ்கடிக்கும் சமயம் வந்து விட்டது'' என்று அறிவித்ததும் என் வயிற்றில் ஏராளமான பட்டு

பூச்சிகள் துள்ளின. ''கடலுக்கடியில் உள்ள பாதாள உலகில் உள்ள கடல் மனிதர்களை சந்தித்து உங்களை அங்கே அழைத்துச் செல்வதைப் பற்றி கலந்தாலோசிக்க வேண்டும். ஒரு விஷயம் ஞாபகம் இருக்கட்டும். கடல் மனிதர்கள் மிகவும் மரியாதைக்குரிய பிரஜைகள்! உருவத்தில் பாதி உங்களைப் போலிருந்தாலும், மனிதர்களின் தீய குணங்கள் எதுவும் அவர்களிடம் கிடையாது. அதனால் அவர்களிடம் நீங்கள் மரியாதையாக நடக்க வேண்டும்'' என்றார்.

உடனே, கோவா கப்பலின் அடித் தளத்தில் இருந்த 'ஜலதாரை' என்ற அறைக்குச் சென்று ஒரு முகமுடியுடன் திரும்பியது. அதைப் பொருத்திக் கொண்டபின், எங்களிடம் விடை பெற்றுக் கொண்டு கடலுக்குள் குதித்து மூழ்கி பாதாள உலகுக்குச் சென்றது. கோவா எப்போது திரும்பி வரும் என்று காத்துக் கொண்டு இருந்தோம். எனக்கு மட்டும் நிமிடத்துக்கு நிமிடம் இனந்தெரியாத பயம் அதிகரித்து வந்தது. லட்டு எதைப் பற்றியும் கவலைப்படாமல் டைனாசரஸ் சகோதரிகளின் கால்களை முகர்ந்து பார்த்து, பற்களால் இலேசாகக் கடிக்க முயல, அவை லட்டுவை தள்ளிக் கொண்டே இருந்தன. ஒரு யுகமே கழிவது போல் இருந்தது. ஆனால், கோவா வரவில்லை. கடைசியில் ஒருவாறாக கோவா தண்ணீரைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்தது. புஷ்பா ஒரு ரப்பர் டியூபை தூக்கிப் போட, கோவா அதைப் பிடித்துக்




கொள்ள, அதை எல்லாருமாகக் கப்பலுக்குள் தூக்கினோம்.

''கடல் மனிதர்களை ஒப்புக் கொள்ள வைத்து விட்டேன்'' என்று கோவா சொன்னதும் 'அப்பாடா' என்று நிம்மதியாக பெருமூச்சு விட்டேன். ஆனால், தாத்தா நிம்மதி அடையவில்லை. ''ஏதாவது நிபந்தனை விதித்தார்களா?'' என்று கோவாவைக் கேட்க, ''ஆமாம்!'' என்றது அது. தொடர்ந்து, ''ஒரு மனிதனை மட்டும் தனியாக சில நாள்களுக்கு அவர்களிடம் விட வேண்டுமாம். அவனோடு பேசிப் பழகிய பின்னர், அவனால் ஆபத்து வராது என்று நிச்சயமாகத் தெரிய வேண்டுமாம். போர் முடியும் வரை ஒருவன் அவர்களோடுதான் இருக்க வேண்டுமாம்!'' என்றது.

## அம்புலிமாமாவை மதிப்பிடுங்கள்

அம்புலிமாமாவில் எந்தப் பகுதியை அதிகமாகப் படிக்க விரும்புகிறீர்கள்? (a) கதைகள்; (b) புதிர், வேதகணிதம் முதலியவை; (c) இரண்டுமே.
உங்கள் பதிலை RYC <a/b/c> to 54646க்கு SMS செய்யுங்கள்.

**ஜூலை 2009 முடிவு :**

a: 21%; b: 10%; c. 69%

என் உடல் பயத்தினால் மீண்டும் சில்லிட்டது. அறிமுகமில்லாத மனிதர்களுடன் பேசுவதென்றாலே எனக்கு முள்மேல் இருப்பதைப்போல் தோன்றும். அப்படிப்பட்ட நான் மனிதர்களேயற்ற, பாதிமீன் பாதி மனித உருவங்கொண்ட விசித்திர ஜந்துக்களுடன் எப்படி காலம் தள்ள முடியும்? ஆனால், அதற்காக வயதான தாத்தாவை அவர்களிடம் தங்க விடுவதா? நான்தான் அவர்களுடன் இருக்க வேண்டும். வேறு வழியில்லையா?



''நான் போகிறேன்'' என்று முனகினேன். உடனே தாத்தா, ''வேண்டாம்! லட்டுவைக் கூட்டிக் கொண்டு நான் போகிறேன்'' என்றார். ''ஐயோ, உங்களால் முடியாது தாத்தா'' என்று நான் அவரைத் தடுக்க முயன்றும் பயனில்லை. மறுபடியும் ஜலதாரைக்குச் சென்ற கோவா. அங்கிருந்து எங்களுக்காக முகமூடிகளை எடுத்து வந்தது. லட்டுவுக்கு முகமூடியைப் பொருத்த மிகவும் கஷ்டப்பட்டோம். அதற்கு அது பிடிக்கவேயில்லை.

பிறகு, பாரதி கப்பலின் மேல் தளத்தில் நடுநாயகமாக இருந்த ஒரு பித்தளை சக்கரத்தைச் சுழற்றினார். சில கணகங்களுக்கு ஒன்றுமே ஆகவில்லை. அதன்பிறகு ஏதோ மந்திரம் போட்டதுபோல், வானத்தில் இருந்து கப்பலின் மீது மட்டும் மழை பெய்தது. கடலின் மற்ற பகுதிகளில் மழை பெய்யவில்லை. மழைத் தண்ணீர் கம்பிகள் போல் மிகுந்த சக்தியுடன் கப்பலின் மீது விழுந்தது. என்ன அதிசயம்? கப்பலில் அவை விழுந்த இடங்களில் ஓட்டைகள் உண்டாக, அதன்வழியாக கடல் தண்ணீர் நுழைய, கப்பல் மெதுவாக மூழ்க ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் அனைவரும் கடலுக்கடியில் இருந்தோம்.

முகமூடிகள் இருந்ததால்,

நாங்கள் மூச்சுத் திணறவில்லை. அதுமட்டுமல்ல! எங்களால் நன்றாக மூச்சுவிடவும் முடிந்தது. கடல்நீரில் நீந்துவதும் எளிதாக இருந்தது. நான் பயந்து நடுங்கியதற்கு, அந்த அனுபவம் சுமாக இருந்தது. ஆனால், புதிய அனுபவத்தை லட்டு ரசிக்கவில்லை. சொல்லாமல் கொள்ளாமல் கிடைத்த கடல்நீரின் குளியல் அதற்கு பிடிக்கவில்லை. பேசும்போது, எங்கள் வாயிலிருந்து வரும் சொற்கள் தண்ணீரைத்தள்ள, அதனால் பெரிய அலைகள் உண்டாயின. கோவா சொகுசாக நீச்சலடித்தது. யானை கடலிலிருந்த மீன்களுடன் எதோ பேச முயன்று தோல்வியுற்றது.

திடீரென ஏதோ ஒரு விசித்திரமான உருவம் என் முன் தோன்றியது. அதற்கு என்னைப் போல் கைகள் இருந்தன. முகமும், உடலும் இருந்தன. ஆனால், இடுப்புக்குக் கீழ் மீனாக இருந்தது. ஒகோ! இதுதான் கடல் மனிதனா! சில நிமிடங்களில் பல கடல் மனிதர்கள் எங்கள் முன் தோன்றினர். எங்களையே அவர்கள் கண்கொட்டாமல் ஆச்சரியத்துடன் பார்த்தனர். என்ன அதிசயம்? பொதுவாக பால் போல் வெள்ளையாயிருந்த இமைக்காத அவர்களுடைய கண்கள் அடிக்கடி சிவப்பு, நீலம், பச்சை என்று நிறம் மாறிக்கொண்டே இருந்தன. நீளத் தலைமுடி தோளிலும், மார்பிலும் புரள, இடுப்புக்குக் கீழ் மீனின் செதில்கள் பளபளவென்ன மின்ன, வாலை அடிக்கடி வாள் போல்




தண்ணீருக்குள் வீசிக்கொண்டே இருந்தனர்.

அதற்குள் தாத்தா லட்டுவையும் கூட்டுக்கொண்டு, ஏதோ நெங்கிய உறவினர்களைப் பார்த்து சொந்தம் கொண்டாடுவதுபோல், கடல் மனிதர்களுடன் கைகுலுக்கச் சென்றார். டைனாசரஸ் சகோதரிகள் அவரை தடுத்தன. முதலில் கோவா அவர்களிடம் சென்று வணங்க, அவர்கள் பதிலுக்கு கைகளை உயர்த்தி வணக்கம் தெரிவித்தனர். அவர்களில் ஒருவன் சிப்பிகளினாலான மாலை அணிந்து கொண்டிருந்தான். அவன் முன்னேவந்து, ''மனிதர்களை நாங்கள் வரவேற்கிறோம். எங்களுக்கு அவர்களுடன் பகையேதுமில்லை. எங்கள் இனம் அழிந்தபிறகே மனிதர்கள் தோன்றினர்'' என்றான்.

மற்றொருவன், ''ஆனால், அநுநிர்வாவில் உள்ள பெரும்பாலான மனிதர்கள் மிகவும் மோசமானவர்கள் என்று கூறுகின்றனர். பேராசை பிடித்த

அவர்கள் தாங்கள் காண்பதை எல்லாம் தனதாக்கிக் கொள்வர் என்றும் அறிகிறேன். அதனால் உங்களில் ஒருவர் மட்டுமே இங்கு இருக்கலாம். மற்றொருவர் சந்திக்கட்டும்'' என்றான்.

அதற்கு கோவா தாத்தாவைக் காட்டி, ''இதோ, இவரும் லட்டுவும்தான் உங்களுடன் இருக்கப் போகிறார்கள்'' என்றது. ''அது என்ன?'' என்று சிப்பி மாலையணிந்தவன் லட்டுவை சுட்டிக் காட்டி கேட்டான்.

''அது என்னுடைய நாய்!'' என்று தாத்தா பதிலளித்ததும், கடல் மனிதர்கள் தங்களுக்குள் கசமுசா என்று ஏதோ பேசிக் கொண்டனர்.

''அது ஏன் இங்கே இருக்க வேண்டும்? நாங்கள் ஒரேயொரு மனிதனை மட்டுமே அனுமதிப்பதாகக் கூறினோம் அல்லவா?'' என்றது அவர்களிடையே ஒருவனது குரல். அவனது கருத்தை ஆமோதிப்பதுபோல் கடல்மனிதர்கள் அனைவரும் குரலெழுப்ப, அது தேனீக்களின் ரீங்காரம் போல் ஒலித்தது. உடனே அவர்களை நோக்கி கையமர்த்திய புஷ்பா, ''இந்த மனிதனோடு மற்றொரு மனிதன் தங்கினால் நீங்கள் அதை எதிர்த்துக் குரல் கொடுப்பதில் நியாயம் உள்ளது. ஆனால், இங்கே இந்தக் கிழவருடன் தங்கப்போவது அவருடைய நாய்! மனிதனை வைத்து நாயை தவறாக எடை போட வேண்டாம். நன்றி கெட்ட மனிதனுக்குத் தோழனாக இருந்தாலும், உலகிலேயே மிகவும் நன்றியுள்ள உயிர் நாய் ஒன்றுதான்'' என்று அழுத்தமாகக் கூறினாள். அவள் பேசும்போது உண்டான அலைகள் கடல் மனிதர்களையே தத்தளிக்க செய்தது.



சிப்பி மாலையணிந்த கடல் மனிதன் ''சற்று யோசிக்க விடுங்கள்'' என்று கூறி அனைவரையும் அருகில் அழைத்தான். வெகுநேரம் கடல் மனிதர்கள் கலந்துரையாடிய பின், அதே கடல்மனிதன் ''அந்த மனிதனும், நாயும் எங்களுடன் தங்கலாம்'' என்றதும், நாங்கள் நிம்மதியடைந்தோம். யானை மகிழ்ச்சியில் பலமாகப் பிளிறியது. தாத்தாவைப் பிரிய வேண்டுமே என்று எனக்கு வருத்தமாக இருந்தது. கனத்த இதயத்துடன், அவரிடம்

இருந்தும் லட்டுவிடமிருந்தும் விடைபெற்றேன்.

பிறகு தாத்தாவையும், லட்டுவையும் கடல் மனிதர்கள் சூழ்ந்து கொண்டனர். அவர்களுடைய செதில்களிலிருந்து உண்டான கண்ணைப் பறிக்கும் ஒளியில் தாத்தாவை சரியாகப் பார்க்கக்கூட முடியாமல் கண் கூசியது.

ஒரு பெருமூச்சுடன் திரும்பினேன். பாரதி ஏதோ யோசித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து ''என்ன யோசனை?'' என்று ஜலதாரைக்கு ராபினையனுப்பி அங்கு எல்லாம் ஒழுங்காக இருக்கிறதா என்று நிச்சயம் செய்து கொண்ட பிறகே நாம் அங்கே செல்ல வேண்டும். ராபின் என்ற அந்த கரப்பான் பூச்சியைப் பற்றி நான் மறந்தே போயிருந்தேன். அது எங்கே இருக்கிறது என்று தேடினேன். ஒரு டைனாசரஸ் தன் கையில் பிடித்திருந்த பாட்டிலுக்குள் சமர்த்தாக உட்கார்ந்திருந்தது.

''அவன் முகமூடி அணிய மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்ததால் அவனுக்காக இந்த ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று'', என்ற பாரதி ''அதிருக்கட்டும்! அவனை இத்தனை ஆர்வத்தோடு நீ பார்ப்பதைப் பார்த்தால் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நீ இதற்கு முன் அவனுடைய குடும்பத்தை உங்கள் உலகில் பார்த்ததேயில்லையா உங்களுக்குத்தான் அவர்களைக் கண்டாலே பிடிக்காதே!'' என்றார்.

''அவனால் நமக்கு உபயோகம்




உண்டு. அவன் இங்கு எப்படியோ வந்துவிட்டான். அவனுடைய இனம் இன்னும் உலகில் அழியவில்லை. அழியவும் அழியாது. பல யுகங்களைக் கண்டிருக்கிறது அவன் இனம்! அவனால் நமக்கு என்ன உபயோகம் எனில் அநுநிர்வாவின் மூலைமுடுக்குகள் எல்லாம் அவனுக்கு மனப்பாடம்! போர் நடக்கும்போது அவனுடைய உதவி பெரிதும் தேவைப்படும்'' என்றார் பாரதி.

''போரா? என்ன போர்? யாருடன்?'' என்று கேட்டேன்.

''நான் உன்னை அழைத்துச் செல்லப் போகுமிடத்தில் தினமுமே போர் நடக்கிறது. வா, உன்னை காட்டுக்கு அழைத்துப் போகிறேன்'' என்றார் பாரதி. *(தொடரும்)*

*– சௌம்யா இராஜேந்திரன்*

**Avail the loyalty bonus!**

**Chandamama Subscribers will get flat 20% off on subscription renewals! (All Editions)**



# Chandamama!

**Because stories make the world go round...**

**Choose** your Chandamama!
Go to www.chandamama.com or SMS CSHOP to 54646 & we'll get in touch with you!
Subscribe Now!!



Chandamama is available in English and 12 regional languages.
Junior Chandamama for children below 9 years is available only in English.

I want to subscribe to / gift / renew subscription for the following editions of Chandamama:

☐ English ☐ Telugu ☐ Tamil ☐ Kannada ☐ Hindi
☐ Marathi ☐ Gujarati ☐ Oriya ☐ Bengali ☐ Sanskrit
☐ Santali ☐ Malayalam ☐ Assamese ☐ Junior

Name: ..............................................................

Date of Birth: .............................. Sex : ..............................

Address: ..............................................................

..............................................................

..............................................................

.............................................. City: ..............................

State:.............................. Pin:..............................

Telephone:..............................................................

Mobile:..............................................................

Email:..............................................................

Subscription Number 9for renewals):..............................

Gift Subscription to the following address:

..............................................................

..............................................................

..............................................................

..............................................................

Enclosed Cheque/DD* for Rupees..............................

Cheque/DD No ..............................

favouring Chandamama India Ltd on..............................

..............................................................bank.

*Add Rs.60 for non-Chennai cheques. Your subscription will commence in 4 weeks.

Please mail the subscription form to:
**Chandamama India Limited,**
New 2/513 (Old 3/396) Sundeep Avenue East,
2nd Main Road, Chinna Neelankarai,
Chennai - 600041. Phone: (044) 43992828, Fax: (044) 43992829
Email: subscription@chandamama.com
You can also subscribe online at: www.chandamama.com

| Take Your Pick! | 1 YEAR | 2 YEARS | 3 YEARS | 4 YEARS | 5 YEARS |
|---|---|---|---|---|---|
| ENGLISH (Rs 25/- per copy) | Rs. 300 | Rs. 540 | Rs. 765 | Rs. 960 | Rs. 1125 |
| You Save | | Rs. 60 | Rs. 135 | Rs. 240 | Rs. 375 |
| REGIONAL (Rs. 20/- per copy) | Rs. 240 | Rs. 430 | Rs. 610 | Rs. 770 | Rs. 900 |
| You Save | | Rs. 50 | Rs. 110 | Rs. 190 | Rs. 300 |
| JUNIOR (Rs. 15/- per copy) | Rs. 180 | Rs. 325 | Rs. 460 | Rs. 575 | Rs. 675 |
| You Save | | Rs. 35 | Rs. 80 | Rs. 145 | Rs. 225 |

Annual Subscription Overseas : US $40 for English Chandamama, US $30 for Regional Languages, US $25 for Junior Chandamama (including shipping and handling charges) by air mail.

# மண்டுக்கோட்டை – 14



***(தூமல், சோமன் குள்ள ராட்சஸனின் அருகில் சென்று பார்த்த பிறகு, அவனருகே இருந்தது புலிந்தனின் மனைவியல்ல என்று தெரிந்தது. பிறகு, ராட்சஸன் அவர்களைப் பாழடைந்த கோயிலுக்குள் அழைத்துச் சென்று அங்கு சுரங்கப் பாதையிலிருந்த பயங்கர முதலைகளையும், பாம்புகளையும் காட்டினான்–)***

**பா**ம்புகளையும், முதலைகளையும் சிறிது நேரம் உற்றுப் பார்த்த தூமலுக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. குள்ள ராட்சஸன் உண்மையிலேயே நமக்கு உதவி செய்கிறானா அல்லது நடிக்கிறானா என்று புரியவில்லை. ஒரு வேளை இவனும் மகாலி ராட்சஸனின் கையாளோ என்ற சந்தேகமும் உதித்தது. அந்த சுரங்கப்பாதை உண்மையாகவே மண்டுக்கோட்டைக்கு செல்லும் வழி தானா என்றும் சந்தேகம் தோன்றியது.

அதனால் அவன் குள்ள ராட்சஸனை நோக்கி, ''நீ சொல்வது உண்மை என்று நம்புகிறோம். இந்தப் பாதைதான் மண்டுக்கோட்டைக்குச் செல்லும் வழி என்கிறாய். நீ அடிக்கடி இங்கு சென்று வந்திருக்கக்கூடும். அதனால் நீ முன்னால் செல்! உன் பின்னால் நாங்கள் வருகிறோம்'' என்று சொல்லிக் கொண்டே தன் ஈட்டியை ராட்சஸனின் முதுகில் குறிவைக்க, சோமன் தனது வில்லில் பூட்டிய அம்பினை அவன் தலைக்குக் குறி வைத்தான்.

அவர்களுடைய செய்கையினால் அஞ்சிய ராட்சஸன் ''உங்களுக்கு என் மீது நம்பிக்கையில்லையா?'' என்று கேட்டான். தூமல் அதற்கு பதிலளிக்க வாயெடுக்குமுன், ராட்சஸனின் மனைவி அலறிக்கொண்டே முன் வந்து, ''ஐயோ! என் புருஷனை ஒன்றும் செய்துவிடாதீர்கள். அவன்



ராட்சஸனாக இருந்தாலும், மனிதர்களைவிட மிகவும் நல்லவன்'' என்று கண்ணீர் வடித்தாள்.

''அப்படியானால் அவன் ஏன் எங்களை ஏமாற்றப் பார்க்கிறான்? மண்டுக்கோட்டைக்கு வழி கேட்டால், தெரிந்து கொண்டே ஏதோ போகாத ஊருக்கு வழி காட்டுகிறான். இப்படி எல்லாம் எங்களை ஏமாற்ற நினைத்தால், நாங்கள் அவனுடன் பேச மாட்டோம். ஈட்டியும், அம்பும்தான் பேசும்'' என்றான்.

''அடக்கடவுளே! நான் ராட்சஸன் என்பதால் என் பேச்சை நம்ப மறுக்கிறீர்கள். ஆனால், என் மனைவி உங்களைப் போல் மனித குலத்தில் தோன்றியவள். அவள் பேச்சையாவது நம்பக் கூடாதா? நான் ராட்சஸன்தான்! ஆனால், மகாகலி ராட்சஸனின் ஆள் இல்லை. அப்படியிருந்தால் இந்நேரம் உங்களுடன் பேசிக்கொண்டா இருப்பேன்? உங்களை கொன்று தின்றிருப்பேனே! நான் சொல்வதை நம்புங்கள். இதுதான் சரியான பாதை! அதே சமயம் மண்டுக்கோட்டைக்குச் சென்ற மனிதர்கள் யாரும் உயிருடன் திரும்பியதில்லை என்பதையும் நம்புங்கள்'' என்றான்.

பிறகு, ஒரு நீளக் கொடியை அவர்களிடம் அளித்த ராட்சஸன், ''இதைப் பிடித்துக் கொண்டு இந்த சுரங்கத்தில் இறங்குங்கள். நடுச்சுவரில் ஒரு பெரிய பாறை நீட்டிக் கொண்டு காணப்படும். அதை நகற்றினால் ஒரு படிக்கட்டு தென்படும். அது உங்களை மற்றொரு சுரங்கத்தில் கொண்டு விடும். அந்த சுரங்கத்தின் வழியே சென்றால், அது வெளியே கொண்டு விடும். அதுதான் தண்டகாரண்யம்! அதுதான் மகாகலி ராட்சஸனின் சாம்ராஜ்யம்! அங்கு சென்றால் மண்டுக்கோட்டையைப் பற்றிய விபரங்களை எளிதாக அறியலாம்'' என்றான்.

ஆனால், தூமலின் சந்தேகம் அதிகரித்தது. அவன் சொல்வது போல் தண்டகாரண்யம் வரவில்லை என்றால் என்ன ஆவது? தாங்கள் பிடித்துக் கொண்டு இறங்கும் கொடி அறுந்தால், நேராக சுரங்கத்தின் தரையில் படுத்து இருக்கும் முதலை மீது சென்றுதான் விழவேண்டும் என்று பலவாறாக யோசித்தான்.

அதற்குள் புலிந்தன், ''தூமல்! குள்ள

ராட்சஸன் சொல்வதை நம்பாதே! இவன் நம்மை ஆபத்தில் சிக்க வைத்து விட்டு, அவளைத் தூக்கிச் சென்று விடுவான். அதனால் அவனை விடக் கூடாது'' என்று கத்தினான்.

இவ்வாறு அடிக்கடி புலிந்தன் புலம்பிக் கொண்டேயிருந்தது தூமலுக்குப் பிடிக்கவில்லை. இவனைத் தன்னுடன் அழைத்துச் சென்றால் தொந்தரவுதான் உண்டாகும் எனத் தோன்றியது.

''புலிந்தா! இது நிச்சயமாக உன் மனைவியில்லை. அவளை மகாகலி ராட்சஸனின் ஆட்கள்தான் பிடித்துச் சென்றிருக்கின்றனர் என்பதில் சந்தேகமில்லை. நீ பேசாமல் வீட்டுக்குப் போ! நாங்கள் எங்கள் ராஜகுமாரியை விடுவித்துக் கூட்டி வருகையில், உன் மனைவியையும் தேடிப்பிடித்து அழைத்து வருகிறோம்'' என்றான் தூமல்.

தூமலின் வார்த்தைகளினால் மகிழ்ச்சியுற்ற புலிந்தன், ''அந்த பொறுப்பை நீ எடுத்துக் கொண்டதற்கு நன்றி! எப்படியாவது அவளை அழைத்து வந்துவிடு! அதுவரை நான் என் மற்ற ஒன்பது மனைவிகளோடு வாழ்க்கை நடத்துகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்றான். ஒரு பெரிய தலைவலி நீங்கியது என்று தூமலும் நிம்மதியடைந்தான்.

அதற்குள் குள்ள ராட்சஸனின் அந்த நீளக் கொடியின் உதவியினால் சுரங்கத்தின் தரையில் கால் வைக்காமல் கீழே இறங்கி நடுவில் நீட்டிக்கொண்டு இருந்த பெரிய பாறையைக் காலால் உதைத்தான். உடனே மரப்பலகைகளிலான ஒரு சிறிய படிக்கட்டுத் தோன்ற அதன் மீது நின்று கொண்டவன் தூமலை நோக்கி, ''பார்த்தாயா! நான் உண்மைதான் சொல்கிறேன் என்று இப்போதாவது நம்புங்கள். சுரங்கத்தின் கீழேயிருக்கும் முதலைகள் நம்மை இந்த உயரத்தில் எட்டிப் பிடிக்க முடியாது. இப்போது நீங்களும் கொடியில் தொங்கியபடி இங்கே வாருங்கள்'' என்றான்.



அதைப் பார்த்ததும் தூமலின் சந்தேகங்கள் விலகின. ஒவ்வொரு வராகக் கொடியைப் பிடித்துக் கொண்டே இறங்கி வந்து மரப்படிக் கட்டில் நின்றனர். அது மற்றொரு சுரங்கப்பாதை வரை செல்வதையும் பார்த்தனர். அந்த சுரங்கத்தை சுட்டிக்



காட்டிய ராட்சஸன், ''அதோ, அந்த சுரங்கப்பாதை வழியாக ஒரு மணி நேரம் நடந்து சென்றால் தண்டகாரண்யத்தை அடையலாம். அங்கிருந்து மலைப்பாதை வழியாகச் சென்றால் மண்டுக்கோட்டையை அடைய நான்கு அல்லது ஐந்து மாதங்கள் பிடிக்கும். பாதை கரடு முரடாக இருக்கும். மிகவும் குழப்பமாகவும் இருக்கும். வழித் தவறினால் கிளம்பிய இடத்திற்கே திரும்பி வந்து சேருவீர்கள். ஏகப்பட்ட கஷ்டங்களும், அபாயங்களும் நிறைந்த பாதை அது. எனவே, மிகவும் ஜாக்கிரதையாகச் செல்லுங்கள்'' என்றான்.

தூமல் நன்றியுணர்ச்சிபொங்க குள்ளனை நோக்கி, ''ராட்சஸர்களில் உன்னைப்போல் நல்லவர்களும் உண்டு என்று இன்றுதான் தெரிந்து கொண்டேன். உனக்கு கும்பீரன் என்னும் ராட்சஸனைத் தெரியுமா? அவன்தான் எங்கள் இளவரசியைத் தூக்கிச் சென்றவன்!'' என்றான்.

''அவனை நன்றாகத் தெரியும்! அவனுடைய கொம்பை ஒரு மந்திரவாதி உடைத்து விட்டான். அந்த மந்திரவாதியும் தண்டகாரண்யத்தில் தான் இருக்கிறான். மகாகலியின் பரம விரோதி அவன்!'' என்றான்.

அதற்குள் சுரங்கத்தின் நுழைவு வாயிலில் உயரே நின்றுகொண்டு இருந்த குள்ளனின் மனைவி, ''அங்கே என்ன கதை பேசிக் கொண்டு இருக்கிறாய்? மேலே வா! வீட்டுக்குப் போகலாம்'' என்று உரக்கக் குரல் கொடுத்தாள். ''வருகிறேன்'' என்று அவளை நோக்கிக் கூறிய குள்ளன், ''ஒரு முக்கியமான விஷயம் தூமல்! நான் தான் மண்டுக்கோட்டைக்கு வழி சொன்னேன் என்பதை தண்டகாரண்யத்தில் வேறு யாரிடமும் சொல்லாதே!'' என்றான்.

சுரங்கத்தில் முன்னேறி நடக்கத் தயாரான சோமனையும், விரூபனையும் தடுத்த தூமல், ''இந்த இருட்டான சுரங்கத்தில் இப்படியே நடந்து செல்வது சரியல்ல! இந்த வழியாகத்தான் மகாகாலியின் ஆட்கள் சென்று வருவார்களெனில், நிச்சயம் இங்கு தீவட்டிகள் கிடைக்கும். சற்றுத் தேடிப் பாருங்கள்!'' என்றான்.

தேடிப்பார்க்கையில் மூன்று தீவட்டிகள் கிடைக்க, அவற்றை

எரியவைத்து, அந்த வெளிச்சத்தில் முன்னேறி நடக்கலாயினர். செல்லும் பாதையில் அவர்கள் கண்ட சில மனித எலும்புக்கூடுகள் அவர்களை உறைய வைத்தது. அரைமணி நேரம் நடந்து சென்றபிறகு, அதுவரை நேராகச் சென்ற சுரங்கப்பாதை வலதுபுறம் திரும்பியது.



எல்லாருக்கும் முன்பாகச் சென்ற தூமல் பாதையில் திரும்பினான். திரும்பியதும் மின்சாரத்தினால் தாக்குண்டவன் போல் தீவட்டியை உடனே கீழே போட்டு, காலால் மிதித்து அணைத்து, மற்றவர்களையும் எச்சரித்தான். அனைவரும் தீவட்டிகளை அணைத்து விட்டு, சுரங்க சுவரிலிருந்து ஒரு பொந்தினுள் பதுங்கினர்.

சிறிதுசிறிதாகத் தொலைவில் தீவட்டிகளின் வெளிச்சம் தெரிய, சுமார் இருபது ஆள்கள் நடந்து வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு முன்னணியில் திடகாத்திரமான ஒரு ராட்சஸன் நடந்து வந்தான். ஆள்களுக்கு பின்னால் ஒட்டி உலர்ந்த சில அடிமைகள் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து கடைசியாக ஒரு ராட்சஸன் வந்தான். முதலில் வந்த ராட்சஸன் பாடிக்கொண்டே வந்தான். கடைசியில் வந்தவன் மட்டும் தூமல் முதலியோர் ஒளிந்திருந்த இடத்திற்கு அருகில் நெருங்கியவன், முகத்தை சுளித்துக்கொண்டு ''இங்கு தீவட்டியின் வாடை அடிக்கிறது'' என்றான்.

அதற்கு முன்னால் சென்ற ராட்சஸன் பின்னே இருந்த சுரங்கத்தில் சாம்பிராணிப் புகை வாசனையா அடிக்கும் நம்முடைய தீவட்டிகளின் வாசனைதான் அடிக்கும்'' என்றான். அவர்கள் சென்றபிறகு, தூமலும் மற்றவர்களும் சத்தமின்றி வெளியே வந்தனர்.

''இந்த சுரங்கத்தில் செல்லும்போது மிகவும் எச்சரிக்கை தேவை'' என்று மற்றவர்களிடம் சொல்லிவிட்டு, தீவட்டிகளை மீண்டும் ஏற்றச் சொன்னான். பிறகு மீண்டும் முன்னேறத் தொடங்கினர். வெகு தூரம் சென்றபின், ''அதோ வெளிச்சம் தெரிகிறது இனி தீவட்டிகளை அணைக்கலாம்'' என்றான்.

பிறகு தீவட்டிகளை அணைத்து விட்டு, மெதுவாக வெளிவாயிலை

நோக்கி நடக்கத் தொடங்கினர். வெளிவாயில் சமீபத்தில்தான் இருக்க வேண்டுமென்றும் அதனால்தான் சுரங்கம் சற்று வெளிச்சமாக உள்ளது என்றும் எண்ணினர். பதினைந்து நிமிடங்கள் அவ்வாறு நடந்தபின், தீவட்டிகளை சுரங்கத்தின் சுவர்களில் காணப்பட்ட சிறிய இடுக்குகளில் திணித்தனர். சுரங்கப்பாதையில் மற்றொரு திருப்பம் தெரிந்தது. அதையடைந்து, பாதையில் திரும்பியவுடன் மிகப்பிரகாசமாக, ஜெகஜோதியாக சூரியனே சுரங்கத்தினுள் நுழைந்ததுபோல் ஓர் ஒளிவீச, மூவரும் திகைத்துப் போயினர். கண்களைக் குருடாக்கவல்ல வெளிச்சத்தைக் காண இயலாமல் கண்களை மூடிக் கொண்டனர். பிறகு, விரைவாக கண்களை சற்றே திறந்து, வெளிவாயிலை நோக்கி பாய்ந்தோடி பக்கவாட்டிலிருந்த பொந்துகளில் மறைந்து கொண்டனர்.

அவர்கள் சற்றுமுன் கண்ட காட்சி அவர்களை மயிர்கூச்செறியச் செய்தது. ஏனெனில் அவர்கள் பார்த்தது மலை போன்ற ஒரு ராட்சஸனை! பலவிதமான தோல்களை உடலில் அணிந்து கொண்டிருந்தான். ஒவ்வொரு தோலும் ஒவ்வொரு வண்ணத்தில் ஒளிர்ந்தது. தலையில் பிரகாசமான கற்கள் பதித்த கிரீடம் திகழ்ந்தது. கையில் முள்கள் நிரம்பிய பயங்கரமான கதையைப் பிடித்திருந்தான். யானைகள் பூட்டிய மகாபிரம்மாண்டமான ரதத்தில் அவன் செல்ல, அவன் பின்னே நூற்றுக் கணக்கான ராட்சஸர்கள் சென்றனர்.

*(தொடரும்)*



## பேய் உணவு விடுதி




**கோ**ஸ்ட் ரெஸ்டாரண்ட் (Ghost Restraurant) என்ற பெயருடன் 6ஆம் எண் தேசிய நெடுஞ்சாலையில் ஓர் உணவு விடுதி தொடங்கவுள்ளது. உடனே, இங்கு பேய்கள்தான் உணவு பரிமாறுமோ என்று கேட்க வேண்டாம். பேய்கள் போல் வேடம் அணிந்தவர்கள் உங்களை அன்புடன் வரவேற்று கவனித்து விருந்து உபசாரம் செய்வார்கள். இதன் சொந்தக்காரர் யார் தெரியுமா? உலகப் புகழ்பெற்ற மந்திரவாதியான பி.சி. சர்க்கார் (ஜுனியர்)! உணவு விடுதியும் பாழடைந்த தோற்றத்துடனும் பேய்களின் படங்களுடன் காட்சியளிக்கும். இதெல்லாம் எதற்கு என்றா கேட்கிறீர்கள்? சும்மா ஒரு தாமாஷ்தான்!

## கத்தி முனையில் கல்யாணம்

**உ**ங்கள் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள மிக அதிகமான வரதட்சனை கேட்டு தொந்தரவு செய்கிறார்களா? அப்படியானால் பீகார் சென்று விடுங்கள். அங்கு இன்றும் சில இடங்களில் பாக்ருவா விவாஹ் என்ற முறையில் மாப்பிள்ளையை மிரட்டிக் கத்திமுனையில் பயமுறுத்தித் தாலி கட்டச் செய்கின்றனர்.

மணப்பெண்ணுக்கும், அவருடைய வீட்டோருக்கும் பிள்ளையைப் பிடித்து விட்டது என்று வைத்துக் கொள்வோம். ஆனால், அவர்கள் மிக அதிகமாக வரதட்சணை கேட்பது பிடிக்கவில்லை என்றால், உடனே அதற்கென்றே உள்ள சில முரடர்களை ஏவி விடுகின்றனர். அவர்கள் தற்போதைய சினிமாவில் வருவதுபோல் மாப்பிள்ளையை அலாக்காகத் தூக்கி வந்து, கத்தியைக் காட்டி மிரட்டிப் பெண் கழுத்தில் தாலி கட்டச் செய்து விடுகின்றனர்.



இது எப்படி இருக்கு?

'இந்தியாவின் இன்முகம்' tamil.chandamama.com தளத்தில்





# ராணி ரூப்மதி

*கி.மு. 1561, மால்வா ராஜ்யத்தில் மண்டு நகரத்தில் ரேவா குண்ட்.*

**ப**ளிங்குச் சிலையென எழிலுற அமர்ந்திருந்த அவள் மீது மாலை சூரியனின் பொற்கிரணங்கள் பட்டு பிரதிபலிக்க அழகு தேவதையாக அவள் திகழ்ந்த காட்சியைக் கண்டு ரசித்த ஆதவனுக்கே அஸ்தமனம் ஆக மனமில்லை. அவள் தன் காந்தள் விரல்களினால் கல்லை வருட, அந்த வழுவழுப்புகூடப் பொறுக்காமல் விரல் நுனிகள் சிவந்தன. அவளுடைய பார்வை சற்றே தொலைவில் பாய்ந்து கொண்டிருந்த நர்மதை நதி மீதே இலயித்திருந்தது. நர்மதையை அவள் ரேவா என்று செல்லமாக அழைப்பாள். அவளைப்போலவே நர்மதையும் ஒரு ஐஸ்வரிய தேவதை! மண்டு நகரை நர்மதையின் நன்கொடை என்றே கூறலாம். நர்மதையின் அழகை ரசிப்பதென்றால் அவளுக்கு அலாதிப் பிரியம்! பசி, தாகத்தை மறந்து இதற்கு முன்னும் பலதடவை மணிக்கணக்காக நர்மதையின் அழகில் மதிமயங்கிப் போய் இதுபோல் அவள் அமர்ந்தது உண்டு.



அப்போது தூரத்தில் ஏதோ சலசலப்பு சத்தம் கேட்டு, நர்மதையின் அழகில் இருந்து கண்களைப் பிரித்தெடுக்க மனமின்றி, ஒலி வந்த திசையை நோக்கித் திரும்பினாள். சேடிப்பெண்ணொருத்தி வைரக் கற்கள் பதித்த தங்கக் கோப்பையில் பழரசம் அளிக்க, அதை வாங்கிக் கொள்ள அவர் கை நீட்டினாள். அந்த சௌந்தரிய தேவதை மால்வாவின் பட்ட மகிஷியான ராணி ரூப்மதி! கோப்பையைப் பெற்றுக் கொண்ட ரூப்மதி புன்னகைத்தபடி, பழரசத்தை துளித்துளியாக சுவைத்தவாறு, நர்மதையை ரசித்துப் பார்த்தாள். ரூபமதியின் நினைவலைகள் பின்னோக்கி ஓடின.



*கி.மு. 1556, மண்டு நகரின் எல்லையிலுள்ளப் பழத்தோட்டம்.*

மியான் பேயெசித் பாஸ் பகதூர் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற் பார்வையிட்டு அரண்மனைக்குக் திரும்பிக் கொண்டு இருந்தான். பொதுவாக, தத்த வீரர்களுக்குப் போர்க்களம் என்பது போதை உண்டாக்குமிடம்! ஆனால், பகதூருக்கு போரே பிடிக்கவில்லை. சிறுவயது முதலே இசை, நடனம், சித்திரம் ஆகிய மென்கலைகளில் மனத்தைப் பறிகொடுத்த பகதூர் வாள், ஈட்டி, ரத்தம், மரணம், போர் ஆகியவற்றை வெறுத்தான். அவனுடைய நல்ல காலம் ஆட்சிப் பொறுப்பேற்று சில ஆண்டுகள் போர் முரசு கொட்டாமல் இருந்தது. ஆனால், அதற்காக பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கைவிட முடியுமா? அதுமட்டுமா? குடிமக்களின் நலன்களுக்காக சாலை போடுதல், மரங்கள் நடுதல், விவசாயம், குடிநீர் ஆகிய தினசரி நிர்வாகப் பொறுப்புகளை யார் கவனிப்பது? ஒருநாள் தலைநகரின் எல்லையில் அவன் குதிரையில் வந்து கொண்டு இருந்தபோது, மிக இனிமையான பெண் குரல் ஒன்று காற்றினில் தவழ்ந்து வந்து அவன் செவிகளை வருடியது.

ஆகா! குரலா அது! தெய்வீகக் குரல்! ரோஜாவின் மென்மையும், மல்லிகையின் மணமும், தேனின் இனிமையும், கள்ளின் போதையும் ஒன்றாகக் கலந்து கேட்பவர்களைக் கிறங்கச் செய்யும் அற்புதமான குரல்! உடனே, குரல் வந்த திக்கை நோக்கி அவன் குதிரையை செலுத்தினான்.



அருகே நெருங்கியதும் பாட்டின் சொற்கள் தெளிவாகக் கேட்டன,

*''அலைவீசும் ஆழ்கடலில்*
*தோணிமேல் சென்று,*
*வலை வீசிக் கண்டெடுத்த*
*வழவழகுப் பெண்ணே!*
*தலையிழந்து உயிரிழந்தால்*
*பொருட்டல்ல!*
*தலை வணங்காமல் நின்று*
*தன்மானம் காப்பாய்!''*

சித்தூர் ராணி பத்மினி தன் மானம் காக்க உயிர்துறந்ததைப் பற்றிய அந்த சோக கீதத்தைக் கேட்டு பகதூர் மெய்மறந்து போனான்.

பொதுவாக, அழகான குரலைப் பெற்றவர்களுக்கு அழகான முகத்தை இறைவன் அளிப்பதில்லை. அதனால் இந்தப் பெண் குயிலும் நிச்சயமாக அழகாக இருக்க மாட்டாள் என்று நினைத்து அவளை அணுகியவனுக்கு



கூடப் பார்த்ததில்லை. ஆனால், அக்பரின் தளபதிகள் ஆதம்கான், முகமதுகான் இருவரும் மால்வா மீது படை எடுத்ததை அவனால் தடுக்க முடியவில்லை. போரையே விரும்பாமல், வாழ்நாளெல்லாம் இசை, நடனம் என்றே கழித்து விட்டு, பாதுகாப்புக்கான போதிய அளவு ஏற்பாடுகள் செய்யாமலிருந்தது அவன் தவறுதான்! அதற்கான பலனை இப்போது பகதூர் அனுபவித்துக் கொண்டிருந்தான். முகலாயப் படைகள் மால்வாவை சூறையாடிவிட்டன. போரில் தோல்வி பூதாகாரமாக அவன் முன் தெரிந்தது.

இன்ப அதிர்ச்சி காத்திருந்தது. அவன் பார்த்த மங்கை செளந்தரியவதியாக இருந்தாள். அவளுடைய அழகைக் கண்டு பிரமித்துப் போனான். நளினமாக அசைந்து, அசைந்து ஆடிக்கொண்டே அவள் பாடியபோது தேவலோக மங்கை ஒருத்தி பூவுலகில் வந்து அபிநயம் பிடிப்பது போலிருந்தது. வானத்தில் இருந்த முழுநிலவு திடீரென விண்ணை விட்டு மண்ணுக்கு வந்தது போலிருந்தது.

அவள் யார், பெயர் என்ன, ஜாதி என்ன என்று எதுவுமே தெரிந்து கொள்ள பகதூர் ஆசைப்படவில்லை. அந்தக் கணம் அவன் ஆசைப்பட்டது ஒன்றேயொன்றுதான்! அவளை மனைவியாக அடைய வேண்டும்!

✣ ✣ ✣

*கி.மு. 1561, மார்ச் 29, சாரங்க்பூர் போர், மால்வா.*

எதை அவன் கனவில் பார்க்கக் கூட விரும்பவில்லையோ, அது நடந்து விட்டது. அவன் யாருடனும் போர் தொடுப்பதைப் பற்றி நினைத்துக்

ஆசையாசையாக தான் கரம் பிடித்த ராணி ரூபமதிக்கு இந்தத் தோல்வி எத்தனை பெரிய அதிர்ச்சியை அளிக்கும் என்பதை அவனால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. முதன்முதலாக சந்தித்த அன்று, அவனைத் தன் கீதத்தினால் கவர்ந்த இசைக்குயில் ஒரு கண்ணியமான இராஜபுத்திர குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று அறிந்தான். அவன் எவ்வாறு அவளைப் பார்த்த மாத்திரத்தில் அவளிடம் மனத்தைப் பறிகொடுத்தானோ, அதேபோல் அவளும் தன் மனத்தைப் பறிகொடுத்தாள். அவர்களுடைய திருமணம் பாரத கண்டம் முழுவதும் பேசப்படுமளவிற்கு மிகவும் விமரிசையாக நடந்தது. தன் மனைவி

மிகவும் விரும்பிய நர்மதை நதியின் அழகை அவள் எப்போதும் பார்த்து ரசிக்க அவளுக்காக ரேவாகுண்ட் என்ற அழகான உப்பரிகையையே உருவாக்கினான். அதில் அமர்ந்து நர்மதையை அவள் பார்த்து மகிழும் காட்சியைத் தான் கண்டு மகிழ்ந்தான். அந்த வாழ்க்கைக்கு விதி ஒரு முற்றுப் புள்ளி வைக்கப் போவதை எண்ணி மனமுடைந்தான்.

போரின் தோல்வியை தான் எப்படி எதிர் கொள்வது? தான் முதன்முதலாக ரூபமதியை சந்தித்தபோது அவள் பாடிய, ''தலை வணங்காமல் தன்மானம் காப்பாய்'' என்ற பாடல் அவன் காதில் ஒலித்தது. ஆம்! மானம்வரின் உயிர் நீத்தலே நன்று!



*கி.மு. 1561, மார்ச் 30, ரேவா குண்ட், மால்வா.*

மேல்வா போரில் வீழ்ந்தது. முகமதியப் படைவீரர்கள் அரண்மனைக்குள் நுழைந்து விட்டனர். அரண்மனையில் எங்கு நோக்கினும், கூக்குரல்களும், அழுகைக் குரல்களும் கேட்டன. ரூபமதி ரேவாகுண்டில் அமர்ந்தபடி வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள். போரில் தோல்வியுற்றது தெரிந்து விட்டது. முகமதியர் அரண்மனையில் புகுந்ததும் தெரிந்து விட்டது. எந்த நிமிடத்திலும் அவர்கள் அவளைக் கைப்பற்றலாம்.

சேடிப்பெண் கொடுத்த கோப்பையைக் கையில் ஏந்தியவாறு, ரூப்மதி அந்தப் பெண்ணை நோக்கி, ''கடைசி நிமிடத்தில் எனக்கு மிக முக்கியமான இந்த உதவியை செய்ததற்கு நன்றி! இந்த மண்ணை விட்டுப் பிரியும் முன் ஒருமுறை என் கணவரை பார்க்க முடியவில்லையே என்பதுதான் என் ஒரே வருத்தம்! என் உயிருக்குயிரான நர்மதையே! மறுபிறவி என்று ஒன்றிருந்தால், நான் மறுபடியும் உன் மடியில் தவழவேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே கோப்பையில் இருந்த விஷத்தைக் குடிக்க சேடிப்பெண் கதறினாள்.

தளபதி ஆதம்கான் கடைசியில் ரேவாகுண்டை அடைந்தபோது அவனால் ரூப்மதியின் உயிரற்ற உடலைத்தான் காணமுடிந்தது.

**– பவித்ரா ஸ்ரீனிவாசன்**



# இராஜபோஜனம்





## ஹல்வா



பெயரைக் கேட்டவுடனே நாக்கில் நீரூரச் செய்யும் ஹல்வா துருக்கியில் தோன்றிய மிகப் பழமையான இனிப்பு. மெவ்லானா ஜலாலுத்தீன்–இ–ரூமி என்பவர் பதின்மூன்றாம் நூற்றாண்டில் உணவுப் பொருள்களைப் பற்றி எழுதிய குறிப்புகளிலேயே ஹல்வா இடம் பெற்றுள்ளது.

****



துருக்கியில் சேமியாவை வேகவைத்துக் கூழாக்கி உருண்டைகளாக உருட்டிச் செய்கின்றனர். சர்க்கரை கண்டுபிடிக்கப்படுமுன் தேன் அல்லது திராட்சைச் சாறு கலந்து ஹல்வா செய்யப்பட்டது.

****



பதினைந்தாம் நூற்றாண்டில் 'சுலைமான் தி மக்னிபிசண்ட்' என்ற புகழ்பெற்ற ஒரு சுல்தான் தன் அரண்மனையைப் புதுப்பித்து விரிவுபடுத்தியபோது சமையலறைகளையும் எண்ணிக்கையில் பெருக்கி, ஹல்வா தயாரிப்பதற்காகவென்றே 'ஹல்வா ஹானே' என்ற சமையலறையை உருவாக்கினார்.

****



கிரேக்கர்கள் செங்கல் வடிவத்தில் மேக்டோனிகோஸ் என்ற ஹல்வா தயாரித்தனர். ஹல்வாவில் எலுமிச்சைச் சாறை தெளித்து உண்ணப் பிடிக்குமாம்!

****



திருநெல்வெலி ஹல்வா தமிழ்நாட்டிலேயே மிகவும் பிரபலமானது. முன்னூறு ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலியில் குடியேறிய ஒரு மார்வாடிக் குடும்பத்தினர் தயாரித்த ஹல்வாதான் இன்றும் மிகப் பிரபலமாக மிக அதிகஅளவில் விற்பனையாகிறது.

ஹல்வா இந்தியாவில் பதினாறாம் நூற்றாண்டில்தான் முகலாயர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது. ஆசிய நாடுகளிலேயே, இந்தியாவில் மட்டும்தான் பாம்பே ஹல்வா, பாதாம் ஹல்வா, கேரட் ஹல்வா, காசி ஹல்வா என்று பலவிதமான ஹல்வாக்கள் தயாரிக்கப்படுகின்றன.



****



பதினேழாம் நூற்றாண்டில் இஸ்தான்புல்லில் 'ஹெல்வா சப்பர்கள்' எனும் கருத்தரங்குகள் நடைபெற்றன. இவற்றில் பங்கேற்றவர்கள் இடையிடையே ஹல்வா தின்றுகொண்டே பேசுவார்கள்.

****

நம் நாட்டில் ஹல்வா ஒரு சிற்றுண்டி மட்டுமே! ஈரான் நாட்டில் ஹல்வா உணவாகவே சாப்பிடப்படுகிறது. பெர்ஷியன் பிரெட் துண்டுகளின் இடையே ஹல்வாவை வைத்து 'சாண்ட்விச்' போல் சாப்பிடுவார்கள்.



****



பல்கேரியாவில் வெண்மை நிறத்தில் ஹல்வா தயாரிக்கப்பட்டு அது ஹாம்கேன் என்ற சடங்கில் பயன்படுத்தப்படுகிறது. பிறகு, ஹல்வாத் துண்டுகள் ஒரு நீளக் கம்பில் கட்டப்பட்டு சுழற்றப்படும். சிறுவர், சிறுமிகள் அவற்றை வாயினால் கவ்விக் கொள்ள முயற்சிப்பார்கள்.

****

ஹல்வா என்ற பெயரைப் பயன்படுத்தி சில பழமொழிகள் உருவாகியுள்ளன. போஸ்னியாவில் ''ப்ரோடேஜ் சே காவ் அல்வா'' என்றால், ஹல்வாவைப் போல் விறுவிறுப்பாக விற்பனையாகிறது என்று பொருள். கிரேக்க மொழியில் ''என்ட் ரே, ஹல்வா!'' என்றால் ''போடா, ஹல்வா!'' என்று பொருள்.






நீங்கள் ஹல்வாவை மிகவும் விரும்புகிறீர்களா? தினமும் நிறைய ஹல்வா தின்ன வேண்டுமானால் ஒரே வழி சொந்தத்தில் ஹல்வாக்கடை வைத்து விடுவது தான்!

# கடவுள் எங்கே?

தனது சந்தேகத்திற்கு விளக்கம் தேடி மூன்று மாதங்களாக ஊர் ஊராகத் திரிந்து கொண்டிருந்த சத்தியவான் ஒரு நாள் காட்டு வழியே சென்று கொண்டு இருந்தபோது ஒரு வயதான யோகி தரையில் மயங்கி விழுந்து கிடந்ததைக் கண்டான். உடனே, அவர் முகத்தில் தண்ணீர் தெளித்து, அவரையெழுப்பி, அவருக்கு உணவும், தண்ணீரும் கொடுத்து உபசரித்தான். ''கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்!'' என்று அவர் சத்தியவானை ஆசீர்வதித்தார்.

''இதைத் தெரிந்து கொள்ளத்தான் சுவாமி நான் ஊர் ஊராகத் திரிந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் இப்போது குறிப்பிட்ட அந்தக் கடவுள் உண்மையில் இருக்கிறாரா? அப்படியானால் அவர் எங்கிருக்கிறார்? ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாக அபிப்பிராயம் சொல்கின்றனர்'' என்றான். அதற்கு யோகி, ''இந்தக் கேள்விக்குப் பதிலைத் தேடித் தேடியே நான் இந்த நிலைமைக்கு ஆளானேன். வயதிலும், அனுபவத்திலும் பழுத்த நான் சொல்வதைக் கேள்! கடவுள் கட்டாயம் இருக்கிறார். அவர் ஒவ்வொரு அணுவிலும் வசிக்கிறார். மற்றவர்களுக்கு நன்மை செய்ய விரும்பும் மனிதர்களின் இதயங்களில் அவர் வசிக்கிறார். இறந்து போகவிருந்த என்னை, எங்கிருந்தோ வந்த நீ உயிர் கொடுத்துக் காப்பாற்றினாய் அதனால் என்னைப் பொறுத்தவரை நீ ஒரு கடவுள்! உன்னைப் போன்ற நல்ல இதயம் கொண்டவர்களைப் பார்த்தால் அது கடவுளைப் பார்த்த மாதிரிதான்!'' என்றார்.

தனது சந்தேகத்திற்கு விளக்கம் கிடைத்த மகிழ்ச்சியில் சத்தியவான் அவரை வணங்கி விடைப் பெற்றான்.

*– அவினாஷ்குமார்*



# காவல்காரன்



விஜயகிரி ராஜ்யத்து மன்னர் பூபதியும், அவருடைய முதல்மந்தரி சந்திரவர்மனும் அடிக்கடி மாறு வேடமணிந்து இரவு நேரங்களில் நகர்வலம் வருவதுண்டு. சில சமயங்களில் சந்திரவர்மன் மட்டுமே தனியாக நகர்வலம் வருவதுண்டு.

ஓரிரவில் சந்திரவர்மன் அவ்வாறு தனியாக நகர்வலம் வந்தார். ஒரு வளையல் வியாபாரி போல் மாறு வேடமணிந்து தெருக்களைச் சுற்றி வந்த பிறகு, ஒரு சத்திரத்தில் வந்து இளைப்பாறினார். இரவு உணவை முடித்துக் கொண்டு பிறகு அங்கேயே தூங்கவும் அவர் முடிவு செய்தபோது மூன்று இளைஞர்கள் அங்கு வந்தனர்.

தாங்கள் வெகுதொலைவிலிருந்து வந்திருப்பதாகவும், தங்களுக்கு உணவு அளித்துத் தங்க இடமும் அளிக்குமாறு, சத்திரத்தை நடத்தி வந்த கிழவியிடம் கூறினார்.

''கை, கால்களைக் கழுவிக் கொண்டு வாருங்கள்! உணவு அருந்தலாம்'' என்றாள் கிழவி.

''வரும் வழியிலேயே கை, கால் களைக் கழுவிக் கொண்டாகிவிட்டது. பசி உயிர் போகிறது. உடனே, சாப்பாடு போடு!'' என்றனர் அவர்களில் இருவர். முன்பே உணவருந்த அமர்ந்திருந்த சந்திரவர்மன் அருகில் உட்கார்ந்தனர்.

ஆனால், மூன்றாவது வாலிபன் மட்டும், ''பாட்டி! கை, கால் கழுவி விட்டே வருகிறேன்'' என்று சொல்லி விட்டு, பின்பக்கம் சென்றான். பிறகு, உள்ளே வந்து மற்றவர்களுடன் உட்கார்ந்தான். பிறகு நால்வரும் சாப்பிடத் தொடங்கினர்.

அந்த மூவரும் பேசியதிலியிருந்து, மூன்றாவது வாலிபன் பலராமன், மற்ற இருவரின் பெயர்கள் பாலன், நாகராஜன் என்றும் தெரியவந்தன. மற்ற இருவரும் தங்களுக்குள் மட்டும் உரையாட, பலராமன் கிழவியுடன் பேசிக்கொண்டே சாப்பிட்டான்.




சாப்பிட்ட பிறகு அனைவரும் படுக்கச் சென்றனர். பலராமன் மட்டும் தான் சத்திரத்தைக் காவல் காப்பதாகக் கூறிவிட்டு வெளியில் கட்டில் போட்டு படுத்துக் கொண்டான். பலராமனின் செயல்கள் மந்திரி சந்திரவர்மரின் கவனத்தை ஈர்த்தது.

நடுஇரவில் பலராமனின் கூச்சல் சத்தம் கேட்டு அனைவரும் வெளியே வந்தனர். அங்கு பலராமன் ஓர் ஆளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இருந்தான். அந்த ஆள் தன் முகத்தைத் துணியினால் மறைத்திருந்தான். ''திருடிக்கொண்டு ஓடவா பார்த்தாய்! விடமாட்டேன் உன்னை!'' என்று கத்திக் கொண்டே பலராமன் அவனை அமுக்கிப் பிடிக்க, அந்த ஆள் ''நான் திருடியது உன் பொருள் இல்லை. அப்படியிருக்க உனக்கேன் அக்கறை?'' என்று பலராமன் பிடியிலிருந்து திமிறிக் கொண்டிருந்தான்.

அப்போது மந்திரி குறுக்கிட்டு, ''என்ன விஷயம், பலராமா? என்று வினவ, ''இந்த ஆள் சத்திரத்திலிருந்து யாரோ ஒருவருடைய விலையுர்ந்த செருப்புகளைத் திருடிக் கொண்டு ஓட முயன்றபோது, நான் இவனைப் பிடித்துவிட்டேன். இது உங்கள் உடையது தான் என்று தோன்றுகிறது சற்று பாருங்கள்'' என்றான் பலராமன் படபடப்புடன். ''பலராமா! நீ சத்திரத்தைத் தான் காவல் காக்கப் போவதாகச் சொல்லி வெளியில் படுத்துக் கொண்டாய்! அப்படியிருக்க, இந்த செருப்புகள் விலையுயர்ந்ததாக இருப்பினும் சத்திரத்துப் பொருள்கள் அல்லவே! நீ ஏன் யாருடைய பொருளுக்காகவோ அக்கறை

எடுத்துக் கொள்கிறாய்?'' என்று கேட்டார்.

''நன்றாக கேட்டீர்களே! சத்திரத்தைக் காவல் காப்பது என்றால், சத்திரத்தில் தங்கியிருப்பவர்களின் உடைமைகளையும் சேர்த்துத்தான் காவல் காக்க வேண்டும் என்று பொருள்! என்னைப் போல் ஒவ்வொருவரும் பொறுப்பு உடன் பணியாற்றினால்தான் நாடு உருப்படும்'' என்றான்.

அவனுடைய பேச்சை மிகுந்த சுவாரஸ்யத்துடன் கேட்ட மந்திரி ''நீ மிகவும் பொறுப்புள்ளவன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இப்போது இவனை என்னை செய்வதாக உத்தேசம்?'' என்று கேட்டார்.

''இவனை காவலாளிகளிடம் பிடித்து கொடுப்பேன். பிறகு, மன்னரை சந்திக்க முடிந்தால் அவரிடம் இதைப் பற்றி எடுத்து உரைப்பேன். என்னைப் போன்ற வேலையற்ற இளைஞர்களுக்கு வேலை கிடைக்க அவர் வழிசெய்தால், நாட்டில் குற்றங்களே குறைந்துவிடும். வேலையில்லாத காரணத்தினால்தான் இவனைப் போன்றவர்கள் திருட முயல்கின்றனர். ஆகவே, முதலில் இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்குமாறு திட்டங்கள் வகுக்குமாறு வேண்டிக் கொள்வேன். ஒவ்வொருவனுக்கும் வேலை இருந்தால் அவன் ஏன் திருடப் போகிறான்?'' என்றான் பலராமன்.

''சபாஷ்!'' என்று அவனைப் பாராட்டிய மந்திரி பின்னர் தான் யார் என்பதை அந்த மூவருக்கும் தெரிவித்தார். பிறகு மூவரையும் மறுநாள் சபையில் தன்னை சந்திக்கச் சொன்னார். மறுநாள் சபைக்கு அவர்கள் வந்ததும், மன்னரிடம் முந்தைய இரவில் நடந்த நிகழ்ச்சிகளை விளக்கி, பலராமனின் விவேகம் நிரம்பிய யோசனையைப் பற்றி பாராட்டிப் பேசினார். அது கேட்டு மகிழ்ந்த மன்னர் பலராமனுக்கும், அவனுடைய நண்பர்களுக்கும் அரண்மனையில் வேலை தந்ததுடன், இளைஞர்களின் வேலை வாய்ப்பு வசதிகளைப் பற்றி மந்திரியுடன் திட்டம் தீட்டத் தொடங்கினார்.

– *செந்தில்குமார்*





# கடவுளுக்கு இரக்கமில்லையா?

**கோ**யிலில் உபன்யாசம் கேட்டுவிட்டு ஸ்ரீதரனும், பாஸ்கரனும் மதிய நேரத்தில் வீடு திரும்பினர். வரும் வழியில் ஓரிடத்தில் மரத்தில் இருந்த ஒரு கூட்டில் ஒரு காக்கைக் குஞ்சுக்கு ஒரு கழுகு உணவை ஊட்டிக் கொண்டிருந்தது. அதைப்பார்த்த பாஸ்கர் ''ஆகா! ஸ்ரீதரா! என்ன அற்புதமான காட்சி அது? கோயிலில் நாம் கேட்ட உபன்யாசம் நினைவுக்கு வருகிறதா? கல்லினுள் தேரைக்கும், பழத்தினுள் பூச்சிக்கும், உணவு தந்து காப்பாற்றுபவர் அந்த சாட்சாத் இறைவன் அல்லவா! அந்த கருணாமயமான இறைவன் அதோ அந்த காக்கையின் குஞ்சுக்கும் கழுகின் உருவத்தில் வந்து உணவு ஊட்டுகிறான். என்னே இறைவனின் கருணை! அந்த கருணைக்கடல் என் போன்ற எளியவனின் வயிற்றுக்கும் உணவளிப்பான்'' என்றபடி ஸ்ரீதரனைப் போகச் சொல்லிவிட்டு, வழியில் இருந்த சிவன் கோயில் வாயிலில் அமர்ந்து கொண்டான். ஆனால், மாலை வரை யாருமே அவனுக்கு உணவளிக்கவில்லை.

அப்போது அவனைத் தேடியபடி ஸ்ரீதரன் அந்தப்பக்கம் வர, ''நண்பா! இந்த இறைவனைப் போய் கருணாகரன் என்று புகழ்ந்தேனே! அது பெரிய தவறு நான் இங்கு பசியால் துடிக்கிறேன். இறைவன் எனக்கு உணவளிக்கவில்லை'' என்றான்.

அதற்கு ஸ்ரீதரன், ''முட்டாளே! நீயும், அந்த பலவீனமான காக்கைக் குஞ்சும் ஒன்றாக முடியுமா? உனக்கு கை, கால்கள் திடமாக இல்லையா அதை வைத்து உன் உணவை நீயே தேட வேண்டும்! எவன் ஒருவன் மிகவும் எளியவனாகவும், நிராதரவான நிலையில் உள்ளவனாகவும் இருக்கிறானோ, அவனுக்கு மட்டுமே இறைவன் உணவளிக்க ஏற்பாடு செய்வார். உன்னைப் போன்றவர்கள் இறைவன் கொடுத்த கை, கால்களைப் பயன்படுத்தி உழைத்து சாப்பிட வேண்டும்'' என்றான்.

*– அமுதா*





# சாக்கு சொல்லாதே



**கோ**பி மிகவும் புத்திசாலிப் பையன்! ஆனால், சற்று சோம்பேறி! மனம் வைத்து படித்தால் கணிதத்தில் முதல் ரேங்க் வாங்கலாம். அதே வகுப்பில் படித்து வந்த ராமு கோபி போல் அதிபுத்திசாலியில்லாவிடினும், மிகக் கடுமையாக உழைப்பவன். அதனால் அவனேவகுப்பில் முதலாக இருந்தான்.

ஒருமுறை கோபி மோசமாகத் தேர்வு எழுதி இருபதாவது ரேங்க் பெற்றான். உடனே, அவன் தந்தை அவனிடம், ''நீ வீட்டில் படிப்பதே இல்லை. எப்போதும் ஊர் சுற்றிக் கொண்டே இருக்கிறாய். அதனால் தான் பரீட்சையில் கோட்டை விட்டாய் என்றார்.

அதற்கு கோபி ''அப்பா! எனக்கு வீடியோ கேம்ஸ் மிகவும் பிடிக்கும். அது விளையாடத்தான் வெளியில் போய்விடுகிறேன். நீ அதை வாங்கித் தந்தால் நான் வெளியில் செல்லாமல், சற்று நேரம் விளையாடிவிட்டு, மிச்ச நேரம் படிப்பேன்'' என்றான்.

''நீ வகுப்பில் முதலாவது ரேங்க் எடு! அதன்பிறகு வீடியோ கேம்ஸ் வாங்கித் தருகிறேன்'' என்று அவன் தந்தை உறுதியாகக் கூறிவிட்டார்.

அதன்பிறகு கோபி எத்தனையோ முறை முயன்றும், அவனால் முதல் ரேங்க் வாங்க முடியவில்லை. ஒவ்வொரு முறையும் ''உடம்பு சரியில்லை'' என்றோ, ''பவர் கட்'' என்றோ, ''படித்தது பரீட்சையில் வரவில்லை'' என்றோ ஏதாவது அவன் சாக்கு சொல்லுவான். அதற்கு அவன் தந்தை, ''சாக்கு சொல்லாதே! சாதித்துக் காட்டு! பரிசைப் பெறுவாய்!'' என்று வீடியோ கேம்ஸ் வாங்கித் தராமல் காலங்கழித்தார்.

ஒருமுறை, கணிதப் பரீட்சையில் ராமுவின் பேனா மக்கர் செய்துவிட, அவனால் சரியாக எழுதமுடியாமல், அந்த முறை மதிப்பெண் குறைந்து விட, கோபி முன்னேறி முதல் இடத்தைப் பிடித்துவிட்டான்.

அதைத் தன் தந்தையிடம்

பெருமையுடன் கூறிவிட்டு அவன் வீடியோ கேம்ஸ் கேட்டபோது, ''என்னிடம் பணம் இல்லையே!'' என்று அவர் கையை விரித்து விட்டார்.

''என்னப்பா! என்னை சாக்கு சொல்லாதே என்று திட்டும் நீங்களே இப்போது சாக்கு சொல்லலாமா!'' என்று கோபி தந்தையையே மடக்கி விட்டான்.

அன்று மாலை, ராமு கோபியைத் தேடிவந்தான். அவன் கையில் வீடியோகேம்ஸ் குறுந்தட்டு இருந்தது. கோபுவிடம், ''நான் இந்த முறையும் முதலாவதாக வந்தால், வீடியோ கேம்ஸ் வாங்கித் தருவதாக என் அப்பா வாக்களித்திருந்தார். ஆனால், நான் இந்த முறை கணிதத்தில் மிக மோசமாக மதிப்பெண் பெற்றதால், முதலாவதாக வரமுடியவில்லை. அதனால் முதல் ரேங்க் பெற்ற உனக்கு இதைத் தந்து விட வந்தேன். இந்த வீடியோ கேம்ஸை நீ எடுத்துக்கொள்'' என்றான்.

அதுகேட்டுத் துணுக்குற்ற கோபி, ''ராமு! உன் பேனா மக்கர் செய்ததால் தான் நீ முதல் ரேங்க் வரவில்லை. நான் வேண்டுமானால் உன் அப்பாவிடம் வந்து விளக்கம் தரட்டுமா?'' என்றான்.

''வேண்டாம் கோபி! எனக்கு சாக்கு சொல்லப் பிடிக்காது. சாதனைதான் முக்கியம்'' என்றான்.

''சபாஷ் ராமு!'' என்ற குரல் கேட்டு இருவரும் திரும்பினார். அவர்கள் பேசுவதைக் கேட்டு அங்கு வந்த அவர், ''கோபி! ராமுவின் மனப்பாங்கு உனக்கு இருக்க வேண்டும். உன்னுடைய தோல்விகளுக்கு சமாதானம் அல்லது சாக்கு சொல்லாமல் சாதனையே முக்கியம் என்றிரு! ராமுவின் வீடியோ கேம்ஸ் அவனிடமே இருக்கட்டும். நீ என்னுடன் கடைக்கு வா! உனக்கு நான் இன்றே வீடியோ கேம்ஸ் வாங்கித் தருகிறேன்'' என்றார். ''ஆனால் உங்களிடம் பணம் இல்லை! என்று சொன்னீர்களே'' என்றான் கோபி.

''கோபி! சாக்கு சொல்வது தவறு என்ற நியாயம் உனக்கு மட்டுமல்ல எனக்கும் பொருந்தும்'' என்றார் சிரித்துக்கொண்டே!

*–தீபக்*





# சீதா கல்யாணம்

இராயபுரத்தில் சுந்தரமூர்த்தி மிகப்புகழ்பெற்ற வைத்தியராக இருந்தார். அவர் ஆன்மீக விஷயங்களிலும் அதிக ஈடுபாடு கொண்டிருந்தார். கிராமத்து இராமர் கோயிலுக்கு அவர் போகாத நாளே கிடையாது.

ஒருமுறை கிராமத்துப் பிரமுகர்கள் ஒன்றுகூட அந்த ஆண்டு ராமநவமியின் போது சீதா கல்யாண உற்சவத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாட முடிவு செய்தனர். அந்தத் திருவிழாவை அனைவரையும்விட மிக ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்தவர் வைத்தியர்தான்!

இராமநவமியும் வந்தது. கிராமமே கோயிலில் திரண்டிருந்து. அன்று அதிகாலையிலேயே வைத்தியர் சுந்தரமூர்த்தி கோயிலுக்குச் சென்று சீதா கல்யாண மகோற்சவத்தைக் காணத் தயாரானபோது, அவர் மனைவி கிணற்றடியில் வழுக்கி விழுந்ததால், அவளைக் கவனித்து, காயத்திற்குக் கட்டுப்போட்டுக் கொண்டு இருந்தார். அவசர, அவசரமாக அப்போது ஒரு முதியவர் மிகுந்த பரபரப்புடன் அவரைத் தேடி வந்து, ''வைத்தியர் ஐயா! கர்ப்பவதியான என் மகள் மயக்கமாகி விட்டாள். இப்போது அவளுக்கு நிறைமாதம்! நீங்கள் உடனே வரவேண்டும்'' என்று கெஞ்ச, வைத்தியர் உடனே அங்கு சென்று, அந்தப் பெண்ணுக்கு சிகிச்சை அளித்து சுகப் பிரசவம் ஆகும்படிச் செய்தார். அதற்குள் நண்பகலாகி விட்டது. கோயிலில் உற்சவமும் முடிந்துவிட்டது.

சீதா கல்யாண உற்சவத்திற்குத் தன்னால் போக முடியாமல் போய்விட்டதே என்ற வருத்தத்தில், சுந்தரமூர்த்தி சாப்பிடப் பிடிக்காமல் படுத்தவர் அப்படியே கண்ணயர்ந்தார். ''மகனே! கவலைப்படாதே! நீ இரண்டு உயிர்களைக் காப்பாற்றி இருக்கிறாய். கல்யாண உற்சவத்தைவிட உன்னைப் போன்ற மனிதர்களின் சேவை மக்களுக்குத் தேவை'' என்ற அசரீரியைக் கேட்டு திடுக்கிட்டு எழுந்தான். அது கனவா இல்லை நனவா என்று தெரியவில்லை. கண்களை மூடிக் கொண்டு பிரார்த்திக்கத் தொடங்கினார்.

– *ஷ்யாம்*




கனவுக்கான பொருளைத் தெரிந்து கொள்ள tamil.chandamama.com பாருங்கள்.

# டிஎல்எஃப் கோல்ஃப் அகேதமி



ஹரியானா மாநிலத்திலுள்ள டிஎல்எஃப் கோல்ஃப் அகேதமி (DLF Golf Academy) கோல்ஃப் விளையாட விரும்புபவர்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதம்! வெளிநாடுகளில் மட்டுமே பிரபலமாக இருந்த இந்த விளையாட்டு சமீப காலமாக இந்தியாவிலும் பிரபலமாகிக் கொண்டு வருகிறது. 1999ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இந்தப் பயிற்சிப் பள்ளி இந்தியாவிலேயே கோல்ஃப் விளையாட்டுக்காக முதன்முதலாக உருவாக்கப்பட்டது ஆகும்.

''கோல்ஃப் விளையாட்டில் வெவ்வேறு நிலைகளை எட்டிப் பிடிக்க விரும்புபவர்களுக்கு இந்தப் பயிற்சிப் பள்ளி மிகவும் பயன் உள்ளதாக இருக்கும்'' என்கிறார் அகேதமியின் டைரக்டரான கரன் பிந்த்ரா! கோல்ஃப் விளையாட விரும்புபவர்களுக்கு முறையாகப் பயிற்சியளித்து தேசிய, உலகளவிலான போட்டிகளில் பங்கேற்குமளவிற்கு அவர்களுடைய தரத்தை உயர்த்துவதே இந்த அகேதமியின் நோக்கம்!

விளையாடும் மைதானம் சக்தி வாய்ந்த மின் விளக்குகளினால் ஒளிமயமாக்கப்பட்டுள்ளது. பயிற்சி பெறுபவர்கள் ஆஸ்ட்ரோடர்ஃப் அல்லது நேச்சுரல் டர்ஃப் போன்ற தளங்களில் தாங்கள் விரும்பும் தடத்தை தேர்வு செய்து விளையாட முடியும். மேலும்,

- நான்கு டார்கெட் கிரீன்
- பிட்சிங் ஏரியா
- புட்டிங் கிரீன்

போன்ற வசதிகளும் உண்டு.

இவ்வாறு விதவிதமான தடங்களில் பயிற்சி பெறுவதால், பிற்காலத்தில் உலகின் எந்த மூலையிலும் எந்த விதமான தடத்திலும் விளையாட முடியும். கோல்ஃப் கழியை ஒவ்வொரு ஆட்டக்காரரும் வீசி பந்தையடித்து விளையாடும்போது, அது வீடியோவாக எடுக்கப்படுகிறது. பின்னர், அது அவர்களுக்குப் போட்டுக் காண்பிக்கப்பட்டு அவர்களுடைய குறை, நிறைகள் சுட்டிக் காட்டப் படுகின்றன. இந்த வீடியோக்கள்

விளையாட்டு தகவல்களை முழுமையாக தெரிந்து கொள்ள tamil.chandamama.com

'ஸ்லோ மோஷனில்' காட்டப் படுவதால், தங்களுடைய ஆட்டத்தின் குறைபாடுகளை எளிதாகப் புரிந்து கொள்ள உதவுவதுடன், புதிய உத்திகளைக் கூர்ந்து கவனித்துக் கற்றுக் கொள்ளவும் முடியும். உலகிலுள்ள பல முன்னேறிய நாடுகளில் காணப்படும் இந்த முறை இங்கும் பின்பற்றப்படுகிறது.

இவற்றைத் தவிர, விரிவுரை நிகழ்த்த வகுப்பறைகள், வீடியோ ரூம்கள், நூலகங்கள், பந்துகளைப் பொறுக்கும் இயந்திரம் ஆகியவையும் உண்டு. தரமான பயிற்சியாளர்களும், உலகத்தரம் வாய்ந்த தடங்களும், விளையாட்டு உபகரணங்களும் இருப்பதால், இது இந்தியாவிலேயே மிகவும் தலைசிறந்த அகேதமியாக விளங்குகிறது.

வெகுவாக முன்னேறிவரும் நாடுகளில் ஒன்றான இந்தியாவில் கோல்ஃப் நாளுக்கு நாள் பிரபலமாகி வருவதில் வியப்பில்லை. இந்த விளையாட்டைக் கற்று விளையாட விரும்பும் இளைஞர்கள் பெருகிக் கொண்டே வருகின்றனர். ''உலக அளவில் சேம்பியன்களை உருவாக்கி காட்டியுள்ளோம்; தொடர்ந்து காட்டுவோம்'' என்று மிகுந்த தன்னம்பிக்கையுடன் கூறும் பிந்த்ரா டைகர்வுட்ஸ் மற்றும் திக் விஜய்சிங் ஆகியோரை எடுத்துக்காட்டாகக் காட்டுகிறார்.

நீங்கள் யாருக்காவது கோல்ஃபில் முறையாகப் பயிற்சிகளைப் பெற்று சேம்பியனாகத் திகழ விருப்பம் எனில் உடனே, டிஎல்எஃப் அகேதமிக்குச் செல்லுங்கள்.

*தொடர்பு கொள்ள விவரங்கள் :*
திரு. கரன் பிந்த்ரா
*(டைரக்டர் ஆஃப் இன்ஸ்ட்ரக்ஷன்)*
தொலைபேசி : +91 98181 12330
*முகவரி :* DLF Golf Academy,
DLF Golf Club & Resorts,
DLF City, Phase V
Gurgaon, Haryana - 122 022.
Tel No.: 0124 4525252 Extn : 5245
E-mail : karan@kbgolf.in





மைக்கல் ஃபெல்ப்ஸ்தான் இவருக்கு மானசீக ஆசான்! காமன்வெல்த் கேம்ஸ் பேட்டன் பெல்காம் வழியாகச் செல்லும்போது அதைச் சுமந்து செல்லும் பாக்கியம் இவருக்குக் கிடைத்தது.

**பரிசுகள், விருதுகள் :**

- இந்திர தனுஷ்ய சன்மான் அவார்டு (2004 & 06)
- கனராஜ்ய ஸ்டேட் அவார்டு (2005, 06, 07 & 08)
- ராஜ்யோத்சவ் அவார்டு (2006 & 07)
- பத்கண்டே ஸ்போர்ட்ஸ் அகேதமியின் பெஸ்ட் ஸ்போர்ட்ஸ்மேன் அவார்டு (2008)

# தான்வி தோத்தனவார்

பெல்காமைச் சேர்ந்த 17 வயதான நீச்சல் வீராங்கனையான தான்வி தோத்தனவார், ''மன அழுத்தம் குறைய நீச்சல் ஒரு நல்ல மருந்து. அது மட்டுமல்ல உங்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கும் அது உதவும்; தவிர, மற்ற விளையாட்டுகளைப் போல் நீங்கள் களைத்துப் போய்விட மாட்டீர்கள்'' என்கிறார். இவர் ஒரு நாளைக்கு 5 மணிநேரம் நீந்துகிறார். கிட்டத்தட்ட 5 முதல் 6 கி.மீ. தூரம் ஒரு நாளைக்கு நீச்சலடிக்கிறார்.

''செய்வனத் திருந்தச் செய்'' என்பதே இவருடைய தாரக மந்திரம். ''ஒரு மணிநேரம் படித்தாலும், ஒழுங்காக மனத்தை பாடத்தில் ஒருமுகப்படுத்திப் படிப்பேன். அதனால் இரண்டிலும் என்னால் நன்றாக சாதனை புரிய முடிகிறது'' என்கிறார்.

''பட்டர்ஃப்ளே ஸ்ட்ரோக்'' மற்றும் ''பேக் ஸ்ட்ரோக்'' இவருக்கு மிகவும் பிடித்தவை. 50 மீட்டர் பேக் ஸ்ட்ரோக் நீச்சலில் தேசிய அளவில் சாதனை புரிந்துள்ளார். 2004ஆம் ஆண்டில் நாசிக்கில் நடந்த நேஷனல் சப் ஜூனியர் ஆக்வாடிக் சாம்பியன் ஷிப் இவரைப் பொறுத்தவரை இவரது முழுத்திறமைக்கும் அதிகபட்ச சவால் விடுத்தப் போட்டி!

சர்வதேசப் போட்டிகளில் இந்தியாவின் சார்பாகப் பங்கேற்க வேண்டுமென்பதே இவருடைய இலட்சியம்! எதிர்கால நட்சத்திரங்களுக்கு இவர் கூறும் அறிவுரை: ''உங்கள் திறமையில் நம்பிக்கை வேண்டும். உங்கள் பயிற்சியாளர் மீது நம்பிக்கை வேண்டும். உங்கள் பெற்றோரின் ஆசிகளை பெற வேண்டும்''.

இந்த வளரும் நட்சத்திரத்திற்கு *அம்புலிமாமா* தன் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறது.



# கோல்ஃபின் வரலாறு

பழங்காலத்திலேயே சீனாவில் கோல்ஃபைப் போன்ற ஒரு விளையாட்டு சுயிலான் மைதானத்தில் வெவ்வேறு இடங்களில் குழிகளைத் தோண்டி, அவற்றுள் பந்தினைக் குச்சிகளினால் அடித்து விழச் செய்தனர். அதேபோல் பழங்காலத்திலேயே ரோமர்களும் கோல்ஃப் போலவே 'பாகானிகா' என்ற விளையாட்டை விளையாடினர். ரோமாபுரியிலிருந்துதான் ஐரோப்பாவின் பிற பகுதிகளுக்கு கோல்ஃப் பரவியதாகக் கூறப்படுகிறது.

1452ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தை ஆண்டு வந்த இரண்டாம் ஜேம்ஸ் மன்னர் இந்த விளையாட்டைத் தடை செய்து விட்டார். இந்த விளையாட்டில் ஆர்வம் மிகுந்து போனதால், ராணுவ வீரர்களுக்கு ஆயுதப் பயிற்சியில் ஆர்வம் குறைந்து விட்டதுதான் காரணம்! பிறகு, ஆட்சிக்கு வந்த நான்காம் ஜேம்ஸ் 1502 ஆம் ஆண்டில் இந்தத் தடையை நீக்கி மறு உத்தரவு பிறப்பித்தார். 1567ஆம் ஆண்டில் முதன் முதலாக் ஸ்காட்லாந்துப் பெண்மணியான மேரி குவின் கோல்ஃப் விளை ஆடினார். 1764 ஆம் ஆண்டில் தான், முதன் முதலாக 18 குழிகள் கொண்ட கோல்ஃப் மைதானம் உருவாயிற்று.

உலகிலேயே சிறிய, பழமையான கோல்ஃப் மைதானம் 1867ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தில் லேடீஸ் புட்டிங் கிளப் என்ற இடத்தில் உருவாக்கப்பட்டது. 18 குழிகள் கொண்ட இந்த கோல்ஃப் மைதானம் ஹிமாலயாஸ் என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

1971ஆம் ஆண்டில், அமெரிக்க விண்வெளி வீரரான ஆலன் ஷெப்பர்டு நிலவிலேயே கோல்ஃப் விளையாட்டை ஆடினார். மிக்கெயில் டியூரின் என்ற ரஷ்ய விண்வெளி வீரர் 2006ஆம் ஆண்டில் நவம்பர் 23ஆம் தேதியன்று விண்வெளித்தளத்தில் தங்க முலாம் பூசிய கழியினால் மிக மெலிதான கோல்ஃப் பந்தைத் தட்டி வரலாறு படைத்தார். இந்த கோல்ஃப் விளையாட்டு மட்டும்தான் இருமுறை விண்வெளியில் விளையாடப்பட்டு உள்ளது.



51 வயதில் கிரிக்கெட் போட்டிகளில் கேட்பனாக கலக்கியவர் பற்றி tamil.chandamama.com மில்



## பறக்கும் கார்

டெர்ராஃப்யூஜியா டிரான்சிஷன் எனும் அமெரிக்க நிறுவனம் பறக்கும் கார் ஒன்றை மும்முரமாகத் தயாரித்துக் கொண்டிருக்கிறது. அநேகமாக, 2011ஆம் ஆண்டில் இந்தக் கார் தரையில் ஓடவும் செய்து, விண்ணிலும் பறப்பதைக் காணலாம். இரண்டு இருக்கைகள் மட்டுமே கொண்ட இந்த வாகனத்தில் தரையில் செல்லும் சமயம் போக்குவரத்து இடைஞ்சல் ஏற்பட்டால் உடனே பறந்து சென்று விடலாம். அதேபோல், பறந்து கொண்டிருக்கையில் இதன் சிறகுகளை 30 வினாடிகளில் மடக்கி விட்டு, சாலையில் இறக்கி ஓட்டலாம். விண்ணில் 115 கி.மீ. வேகத்தில் 715 கி.மீ. வரை இது பறக்க முடியும். பெட்ரோலில் இயங்கும் இந்தக் கார் பறக்க ஒரு புரொப்பலர் பொருத்தப்பட்டுள்ளது.

## உலகின் மிகப்பெரிய கேக்

அமெரிக்காவில் மின்னோப்போலிஸ் நகரில் தயாரிக்கப்பட்ட 68.4 கிலோ எடைகொண்ட கேக்தான் உலகிலேயே இதுவரை செய்த கேக்குகளில் மிகப்பெரிய கேக் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. ஸ்பாஞ்ச் பாப் ஸ்குவேர்பாண்ட்ஸ் என்ற மன்றத்தின் 10வது ஆண்டு தினவிழாவையொட்டி இந்த பிரம்மாண்டமான கேக் தயாரிக்கப்பட்டது. கேக் தயாரிப்பதில் நிபுணரான ஜோடி லீ நாப்ஸ் என்பவரின் உதவியுடன் 13 மணி நேரம் பேக் செய்து இந்த கேக் உருவாயிற்று. செய்து முடித்தபின் இது 30.48 செ.மீ. உயரமும் 60.96 செ.மீ. அகலமும் இருந்தது. நிக்கெலோடியான் நெட்வொர்க்கின் கார்ட்டூன் கதாபாத்திரமான ஸ்பாஞ்ச் பாப் ஸ்குவேர்பாண்ட்ஸ் போலவே இந்த கேக் தோற்றமளித்தது. இதை 1,500 பேர் பகிர்ந்து சாப்பிட முடியும் என்று சொல்லப்பட்டது.





# நகைச்சுவை சிறுகதை

## பணம் மரத்தில் காய்ப்பதில்லை

**"க**வனமாகக் கேளுங்கள்!'' என்று சொல்லிவிட்டு, மூக்குக் கண்ணாடியைத் துடைத்து மாட்டிய எங்கள் டீச்சர். ''இந்த தடவை உங்கள் அனைவருக்கும் ஒரு சுவாரஸ்யமான வேலை தரப்போகிறேன். இலைகளினால் ஆன ஆல்பம் ஒன்று ஒவ்வொருவரும் தயாரிக்க வேண்டும்'' என்றாள். இதில் என்ன சுவாரஸ்யம் பெரிதாக இருக்கிறது? என்று நாங்கள் நினைக்கும்போது, ''வேப்ப இலை, அரச இலை எதுவும் உங்கள் ஆல்பத்தில் இருக்கக் கூடாது. வினோதமான இலைகளாக இருக்க வேண்டும். சிறந்த ஆல்பத்திற்குப் பரிசு உண்டு. தவிர, அவர்கள் பாட்டனி டெஸ்ட் எழுத வேண்டாம்'' என்றாள்.

'பாட்டனி டெஸ்ட் எழுத வேண்டாம்' என்ற செய்தி எங்கள் சாதில் தேனாகப் பாய்ந்தது. உடனே, அன்று முதல் எப்பாடுபட்டாவது எளிதில் கிடைக்காத வினோதமான இலைகளை சேகரிக்க முழுமூச்சாக இறங்கினோம். பாரதி பார்க், நேரு பார்க் என்று ஒவ்வொரு பார்க்காகச் சென்று இலை திருடும் முயற்சியில் இறங்கினோம். ஒரு பார்க்கிலும் உருப்படியாக எந்த வினோதமான செடியும் கண்ணில் படவில்லை. ஒருநாள், ஆகாஷ் தன் ஆல்பத்தைக் காட்டி தன் அப்பா தனக்காக ஊட்டியிலிருந்து கொண்டு வந்த சில அபூர்வமான இலைகளைக் காட்டியதும் எங்கள் வயிற்றில் புளியைக் கரைத்தது. கடவுளே, இந்த ஆகாஷ் பரிசைத் தட்டிவிடுவானே என்று பயந்தோம்.



அப்போது எங்களை நோக்கி ஓடிவந்த மணி, ''கண்டேன் இலைகளை!'' என்று சீதையைக் கண்ட அனுமார் போல் பரவசத்துடன் வந்தான். ''டிஃபன்ஸ் காலனியில் 'இந்திரபிரஸ்தம்' என்று ஒரு பங்களா இருக்கிறது. நிஜமாகவே அது இந்திரலோகத்து நந்தவனம் மாதிரி இருக்கிறது. அதைப் பார்த்து விட்டுத்தான் உங்களிடம் சொல்ல வந்தேன்'' என்றான். அப்படியே அவனை



மகிழ்ச்சியில் கட்டி அணைத்துக் கொண்டு, இந்திரபிரஸ்தம் சென்றோம். உள்ளே நுழையும்போது, ''டேய்! டிஃபன்ஸ் காலனியில் ஒவ்வொரு பங்களாவிலும் நாய் இருக்கும்! பார்த்து நுழைய வேண்டும்!'' என்று வெங்கட் சொல்லும் போதே, ''யாரது! எங்கேடா வந்தீங்க?'' என்று குண்டான ஒரு பெண்மணி 'வள்' என்று விழ, ''இந்த வீட்டுக்கு நாய் தேவையில்லை!'' என்று நான் சொல்ல, மற்ற இருவரும் சிரிக்க, அந்த பப்ளிமாஸ் லேடி பத்ரகாளியாக மாறினாள்.

''ஆன்ட்டீ! எங்கள் வீனஸ் ஸ்கூல் ஃபௌண்டர்ஸ் டே விழாவுக்கு லீஃப் ஆல்பம் செய்யணும். நீங்க அனுமதிச்சா, இங்கேயிருந்து சில இலைகளை...'' என்று மணி கேட்க. ''அதோ! அந்த மூலையிலிருந்து எது வேண்டுமானாலும் எடுத்துக்க! இதோ இந்தப் பக்கம் இருக்கிற தாலஸ், ப்ளூமெட்டா இதெல்லாம் ரொம்ப ஸ்பெஷல் வெரைட்டீ இதிலே கை வைச்சா தோலை உரிச்சிடுவேன்'' என்றவள், தன் தோட்டக்காரனைக் கூப்பிட்டு எங்களுக்கு உதவ சொன்னாள். அவனோ உதவி எதுவும் செய்யாமல் நாங்கள் அந்த ஸ்பெஷல் செடிகளில் கை வைக்கிறோமா என்று கண்காணித்துக் கொண்டு நின்றான்.

அப்போது வெங்கட் அங்கிருந்த மயில் மாணிக்கக் கொடியைப் பார்த்து, ''அங்கிள்! எங்கள் வீட்டிலே இது சரியா வளரமாட்டேங்குது! நீங்க பிரமாதமா வளர்த்திருக்கீங்களே!'' என்று ஐஸ் வைக்க, தன் வாழ்க்கையில் முதன்முறையாக தன்னை 'அங்கிள்' என்று ஒரு சிறுவன் அழைத்ததால் தோட்டக்காரன் மயில் மாணிக்கக் கொடியின் சிறப்புகளைப் பற்றி பிரசங்கம் செய்ய, நான் திருட்டுத் தனமாக வீட்டுக்கார எசமானி எதைத் தொடக்கூடாதென்று எச்சரித்தாளோ, அந்தச் செடிகளிலிருந்து இலைகளைப் பறித்தேன். மணியும் தோட்டக்காரன் கதையைக் கேட்டுக்கொண்டு இருந்தான். இன்னும் ஐந்து பறித்தால் வேலை முடிந்துவிடும் என்று நான் பரபரப்புடன் விரைவாக வேலை செய்ய திடீரென என் அருகில் ஏதோ சத்தம் கேட்க, நான் தாலிங் செடி இருந்த தொட்டியில் காலை வைத்துவிட, படாரென்று உடைந்தது. உடைந்த தொட்டியில் இருந்தும், நசுங்கிய செடியிலிருந்தும் என்

காலை வேகமாக எடுக்க, மறுபடியும் தடுமாறி மற்றொரு தொட்டி மேல் விழுந்தேன். அது ப்ளூமெட்டோ செடி! இன்னும் ஒரு கணம் தாமதித்தால் அந்த பம்ளிமாஸ் ஆன்ட்டியின் கையில் சிக்கி இருப்பேன். என் கால் இடறி இன்னும் பல தொட்டிகள் உடைய, பிடித்தேன் ஓட்டம்! என் நண்பர்களும் என்னுடன் ஓடிவந்தனர்.

பிறகு நான் அவர்களிடம், ''நீங்கள் தோட்டக்காரனிடம் பேசிக்கொண்டு இருக்கும்போது நான் ஆன்ட்டியிடம் பெர்மிஷன் வாங்கி எல்லா இலைகளையும் பறித்து விட்டேன்'' என்று புளுகினேன். பிறகு நாங்கள் எங்கள் கடும் முயற்சியினால்! இந்திர பிரஸ்தத்திலிருந்து சேகரித்த இலைகளை வைத்து ஆல்பம் தயாரித்து மிகவும் பெருமையுடன் டீச்சரிடம் காட்டினோம். ''ஆகா! சபாஷ்! உங்களுடைய கலெக்ஷன் ரொம்பப் பிரமாதம்!'' என்று டீச்சர் புகழ்ந்தவுடன், சட்டைக்காலர்களைத் தூக்கி விட்டுக் கொண்டேன். ''அதிருக்கட்டும்! இவ்வளவு அபூர்வமான இலைகள் உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தது?'' என்று டீச்சர் கேட்டவுடன் நான் மென்று விழுங்க, முந்திரிக் கொட்டை வெங்கட், ''டீச்சர்! டிபன்ஸ் காலனி இந்திரபிரஸ்த ஆன்ட்டீ குடுத்தாங்க!'' என்று உளறிக்கொட்ட, டீச்சரின் முகம் ஏனோ திடீரென மாறியது.

''அடப்பாவிகளா பாரிஜாதம் ஆன்ட்டி வீட்டு கார்டனிலிருந்து இலை திருடிய ரவுடிகள் நீங்கள் தானா?'' என்று டீச்சர் கேட்க, ''நான் அவுங்க வீட்டுக்குப் பக்கத்து வீடு!'' என்று டீச்சரே விளக்கம் தந்ததோடு நில்லாமல், எங்கள் மூவரையும் கையோடு இழுத்துச் சென்று பாரிஜாத ஆன்ட்டியின் முன்னால் கொண்டு நிறுத்தினாள். நான் காலால் மிதித்து நசுக்கிய செடிகளை எங்கிருந்தாவது வாங்கி வரவேண்டும் என்று பாரிஜாதம் ஆன்ட்டீ அன்புக் கட்டளை இட்டாள்.

இதோ, இப்போது சுட்டெரிக்கும் வெயிலில் நான் சிட்டியிலுள்ள ஒவ்வொரு நர்சரியாக ஏறி இறங்கிக் கொண்டிருக்கிறேன். பணம் மரத்தில் காய்ப்பதில்லை என்று என் அப்பா சொல்வார். பணம் மட்டும்தானா? நான் தேடும் செடிகளும் எங்குமே வளர்வதாகத் தெரியவில்லையே!

*– ரமா ரமேஷ்*





# நகைச்சுவைத் துணுக்குகள்



ஒரு ஹோட்டலில் சாப்பிட வந்தவர் வெயிட்டரைப் பாடாய் படுத்திக் கொண்டிருந்தார். முதலில் மிகவும் புழுக்கமாகயிருக்கிறது என்று கத்திவிட்டு ஏசியைப் போடச் சொன்னார். சற்று நேரத்தில் குளிர்கிறது என்று சொல்லி அணைக்கச் சொன்னார். இப்படியே மாற்றி, மாற்றி அவர் சொல்ல, வெயிட்டரும் பொறுமையாக சொன்னதை செய்து வந்தார். பக்கத்து டேபிளில் இருந்தவர் வெயிட்டரை அழைத்து கேட்டார். ''என்னப்பா! அந்த ஆள் பாடாய் படுத்துகிறான். உனக்கு கோபம் வரவில்லையா?''

''இல்லை சார்! ஏனென்றால், இந்த ஹோட்டலில் ஏசியே கிடையாது''.



*டீச்சர்:* 1+1=2, 2+2=4. அப்படி யானால் 4+4= எவ்வளவு?

*மாணவன்:* இது சரி இல்லை டீச்சர்! சுலபமான கணக்குகளை நீங்கள் செய்துவிட்டு, கஷ்டமான கணக்காகப் பார்த்து என்னை செய்யச் சொல்கிறீர்கள்.

*ஸ்ருதி:* இன்றைக்கு மஞ்சு என்ன செய்தாள் தெரியுமா? கணக்கு டெஸ்டில் 1 மார்க்தான் வாங்கியிருந்தாள். அதை 5 என்று மாற்றியபோது, டீச்சரிடம் மாட்டிக் கொண்டாள்.

*தாத்தா:* நீ அப்படி செய்யமாட்டாய் என்று நினைக்கிறேன்.

*ஸ்ருதி:* மாட்டவே மாட்டேன்! 1 ஐ 7 ஆக மாற்றி இருப்பேன்.



## சுட்டிப்பயல் கிட்டு









# பயமற்ற நால்வர்!

## தொலைந்து போன கொலுசு—1

ஓவியம்: காந்தி அய்யா

















அன்று மாலையே நால்வரும் உமா வீட்டுக்குச் சென்று சல்லடை போட்டு சலித்துத் தேடினார்கள்.

நிச்சயம் யாரோ திருடி இருக்காங்க!

என்ன?

உன் வீட்டிலே வேலைக்காரங்க உண்டா?

வேலைக்காரி பாக்கியம், தோட்டக்காரன் ராமு! இருவர்தான்!

அப்போது உமாவின் அம்மா அங்கே வருகிறாள்.

வேலைக்காரி பாக்கியம் திருடியிருக்க மாட்டாள்.

ஆமா! அவ ரொம்ப நல்லவள்!

யாருமே திருடலைன்னா, இதற்குள்ளே கொலுசு கிடைச்சு இருக்கணுமே!

அதனால், திருடியிருக்க சான்ஸ் இருக்கு!

உமாவின் அம்மா வெளியே செல்ல—

பாக்கியம் திருடியிருந்தா, நிச்சயமா அதை விற்க முயற்சி செய்வாள்!

யார் திருடினாலும் நம்ம ஊரிலே விற்க மாட்டாங்க!

ஏன்?

அது சாந்தாராம் ஜுவெல்லரிலே வாங்கினது! அவங்க சீல் அதில் பதிந்து இருக்கும்! அதனாலே...

ஓ!

அங்கே விற்கப் போனால், கண்டுபிடிச்சிடுவாங்க!

அப்படின்னா, பக்கத்து ஊர் ஜுவெல்லரி கடைகளிலே விசாரிக்கலாமே!

ஒவ்வொரு கடையாப் போய், யாராவது தங்கக் கொலுசு விற்றாங்களான்னு கேட்கலாம்.

நல்ல ஐடியா!


தேங்க்ஸ்!
எங்களால் முடிந்ததைச் செய்வோம்!
வீட்டில் முதலில் விவரங்களை சேகரிக் கின்றனர்.
எதற்குக் கேட்கிறாய்?
வாலாஜாவில் இரண்டு இருக்கு!
ஆவின் பூத் கிட்ட ஒண்ணு இருக்கு!
பக்கத்து டவுனில் நகைக் கடை இருக்கா?
நால்வரும் மறுநாள் சந்திக் கின்றனர்.
அப்படி னா, மூணு கடையில் விசாரிக் கணுமா?
ஆமா! ஸ்கூல் முடிஞ்சதும் போகலாம்.
டவுனுக்குப் போய் இரண்டு கடைகளில் விசாரித்துப் பயனில்லாமல் போகிறது.
இன்னும் ஒரேயொரு கடைதான் பாக்கி!
இந்தக் கடையிலே கடைசியாக முயற்சி செய்வோம்!
தொடரும்...

AMBULIMAMA (Tamil) September 2009 Registrar of Newspapers of India No. 1095/57, Regd No.
Licensed to post WPP - Inland No.TN/CC(S)Dn/88/09-11, Foreign No. 89/09-11




# புப்பாவின் சாகசம்



























